# (1) பாலுணர்வெழுத்தும் தமிழும்

இணையத்தில் உரையாட வருபவரான நண்பர் பெத்துச்சாமி வெங்கடாச்சலம் 'பாலுணர்வு எழுத்து இலக்கியமா?' என்ற கேள்வியைக் கேட்டிருந்தார். 'ஆம் பாலியல் எழுத்திலும் இலக்கியப்படைப்புகள் உண்டு' என அவருக்குப் பதிலளித்தபின்னும் அதையொட்டியே சிந்தித்துக் கொண்டிருந்தேன். எந்த ஒரு வகை எழுத்திலும் நமக்கு உடனே கிடைப்பது தரமற்ற எழுத்துதான். அதுவே அதிகமான பேரால் எழுதப்படுவதாக இருப்பதே அதற்குக் காரணம். பொதுவாக அதையொட்டியே நமது மனச்சித்திரங்களும் மதிப்பீடுகளும் அமைகின்றன.பாலுணர்வு பற்றி ஆழமான குற்றவுணர்வு உள்ள மக்கள் நாம் என்பதனால் அந்த தரமில்லாத எழுத்தைப் படித்ததுமே தீவிரமான எதிர்நிலைப்பாடுகளை உருவாக்கிக் கொள்கிறோம்.

இலக்கியத்தின் வகைமைகள் முடிவிலாதவை. அவற்றின் வெகுசில வகைகளையே நாம் தமிழில் இலக்கியம் என்ற பேரில் வாசித்துக் கொண்டிருக்கிறோம். துப்பறியும் கதை, திகில்கதை, பேய்க்கதை, அறிவியல்கதை, புதிர்கதை, முதிராக்காதல்கதை போன்ற பல வகைமைகளுக்குள் பேரிலக்கியங்களை நாம் உலக இலக்கியப் பரப்பில் காணலாம். அவற்றில் பாலுணர்வுக் கதையும் ஒன்று.

தமிழில் நாம் பெருவாரியான வணிக எழுத்துக்கு மாற்றான ஒரு போக்காக மட்டுமே தீவிர இலக்கியத்தை புரிந்துகொண்டு வகுத்துக் கொண்டிருக்கிறோம். அதற்கான வரலாற்றுக் காரணங்கள் பல. ஆகவே நம் மனத்தில் தீவிர இலக்கியம் என்பது வாசிப்பார்வத்தைத் தூண்டாதது, குறைவானவர்களால் படிக்கப்படுவது, நுட்பத்தை மட்டுமே இலக்காகக் கொண்டது என்ற எண்ணம் வலுவாக வேரூன்றியது.

அதேபோல எழுத்தாளர்களும் ஒரு எதிர்நிலையில் நின்றே எழுதிவந்தார்கள். வெகுஜன ஊடகங்கள் முன்னிலைப்படுத்திய எழுத்துக்களால் தொடப்படாத தளங்களை மட்டுமே அவர்கள் இலக்கியத்தில் இலக்காக்கினார்கள். வெகுஜனஎழுத்து என்பது காமம்,திகில்,கேளிக்கை என்று மட்டுமே விரிந்தமையால் தமிழ் வாழ்க்கையின் சொல்லப்படாத யதார்த்தங்களை நோக்கித் திரும்பியது நமது இலக்கியம். இன்றும் யதார்த்தவாதமும்,

இயல்புவாதமும் நமது இலக்கிய அழகியலின் மைய ஓட்டங்களாக மேலோங்கியிருப்பதற்குக் காரணம் இதுவே. இந்த இயல்பு வரலாற்றுப் பின்புலம் கொண்டது, இயற்கையானது, சிறப்பானது.

ஆனால் இக்காரணத்தால்தான் நாம் பிற இலக்கிய வகைமைகள் இலக்கியமே அல்ல ,அவை வணிக எழுத்துக்கள் என்ற எண்ணத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறோம். தீவிர இலக்கியம் படிக்கும் வாசகர்களில் ஒருசாரார் உற்சாகமாகச் சொல்லப்பட்ட எழுத்தையே இலக்கியமல்ல என்று நிராகரிக்கும் மனநிலை கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஆதவன் அதனாலேயே அவர்களால் புறக்கணிக்கப்பட்டார். ஏன், எளியமொழியில் நேரடியாக எழுதுகிறார் என்பதனாலேயே அசோகமித்திரனை ஏற்காதவர்கள் உண்டு. இந்நிலையில் பிறவகைமைகளைப் பற்றி பேசவே வேண்டாம்.

உண்மையில் திகில்,காமம்,மனக்கிளர்ச்சி போன்ற தளங்களில் கூட இலக்கியப் படைப்புகளே தீவிரமாகவும் உக்கிரமாகவும் இயங்கமுடியும். வணிக எழுத்து அவற்றையே சார்ந்திருக்கிறது, அவற்றை மீண்டும் மீண்டும் எழுதுகிறது என்றாலும் வணிக ஊடகங்கள் பெருவாரியான மக்களைச் சார்ந்துள்ளன. ஆகவே அவர்களின் பொதுவான ஒர் ஒழுக்க எல்லையை அவை மீறிச் செல்ல இயலாது. அந்த எல்லையை அவையும் உணர்ந்து தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொண்டாகவேண்டும். மாறாக இலக்கியம் எல்லைகள் இல்லாதது. தன் தேடலை தன் திறனின் உச்சம் வரைக்கும் கொண்டுசெல்வது. ஆகவே பாலியல் எழுத்து என்றால் அதன் உச்சம் இலக்கியத்திலேயே சாத்தியம்.

இன்று வணிக எழுத்து என்பது தமிழில் அனேகமாக இல்லை. வணிகக் கேளிக்கை ஊடகமான தொலைக்காட்சி அதன் முதுகெலும்பை முறித்துவிட்டது. எழுத்து என்றாலே இன்று இலக்கியம்தான். ஆகவே இன்று இலக்கியத்துக்கு எதிர்மறைப் பண்பு தேவையில்லை. வணிக எழுத்துக்கு மாற்றாக தன்னை முன்வைக்கும் அவசியமும் இல்லை. அதனால் தன் எல்லைகளை அனைத்துத் தளத்திலும் விரித்துக் கொள்ளும் நிலையில் இருக்கிறது இலக்கியம். பாலுணர்வெழுத்தும் அதில் ஒன்று.

தமிழில் நல்ல பாலுணர்வெழுத்து மிகக்குறைவே. பாலுறவையும் பாலுணர்வையும் எழுதும்போதே சொல்லலங்காரங்களில் சென்று அடைக்கலம் தேடுவது நம் எழுத்தாளர்களின் வழக்கமாக இருக்கிறது.

புதுமைப்பித்தன் ஒரு பாலுணர்வுநாவல் எழுதி வைத்து நண்பர்களுக்கு கொடுத்து வந்ததாக தொ.மு.சி.ரகுநாதன் எழுதியிருக்கிறார். ஏன் இதெல்லாம் எழுதுகிறீர்கள் என்று கேட்டால், "என்ன கேள்வி இது? தமிழன் நல்ல போர்னோகிரா·பி படிக்கவேண்டாமா?" என்று அவர் வேடிக்கை செய்வார் என்று ரகுநாதன் சொல்கிறார். புதுமைப்பித்தன் வேடிக்கை செய்யவில்லை.

தொ.மு.சி.ரகுநாதன் புதுமைப்பித்தன் ஆங்கிலப் பாலுணர்வு எழுத்துக்களை விரும்பிப் படிப்பார் என்றும் தனக்கும் அதில் ஆர்வம் உண்டு என்றும் சொல்லியிருக்கிறார். சி.சு.செல்லப்பா பாலுணர்வு நூல்களைப் படிப்பதில் மோகம் உடையவர் என்று அவ்வப்போது பேச்சு உண்டு — பிரமிள் அதை வெளிப்படையாகச் எழுதியிருக்கிறார். பிரமிளும் அந்த மோகம் உடையவரே. வல்லிக்கண்ணனிடம் ஒரு தகரப்பெட்டி நிறைய பாலுணர்வுப் புத்தகங்கள் இருந்தன என்று சொல்வார்கள்.

தமிழில் எந்த ஒரு இலக்கிய வகைமைக்கும் முதல்தொடக்கம் புதுமைப்பித்தனின் ஆக்கங்களிலேயே இருக்கும். அவரது 'விபரீத ஆசை' யே தமிழ் பாலுணர்வு எழுத்தின் முதல் முன்னுதாரணமாக கொள்ளத்தக்கது. நண்பனின் பிணம் கிடக்க அவன் மனைவியுடன் கூடுபவனின் தடுமாற்றமும் பதற்றமும் பிறழ்வுநிலையும் சொல்லப்பட்ட கதை அது. அதன் பின் நேராக எஸ்.பொன்னுத்துரையின் 'சடங்கு' 'தீ' என்ற இரு ஆக்கங்கள். பாலுணர்வெழுத்தில் தமிழில் இன்றுவரை சிறப்பாகச் சொல்லப்படவேண்டிய ஆக்கம் சடங்குதான்.

எழுபதுகளில் தமிழ்நாடனின்'காமரூபம்' போன்ற நூல்கள் பாலுணர்வுஇலக்கியங்கள் என்று கொண்டாடப்பட்டன. ஆயினும் அவை சொல் அலங்காரங்களில் மறைந்து நின்று சொல்ல முயன்றவையே. பாலுணர்வெழுத்தில் தமிழின் அடுத்த முக்கியமான ஆக்கம் தஞ்சை பிரகாஷின் 'மீனின் சிறகுகள்' அவரது கரமுண்டார் வீடு, கள்ளம் போன்ற நாவல்களிலும் பாலுணர்வு அம்சம் இருக்கிறது.

சமீபத்தில் ஜெ.பி.சாணக்யா பாலுணர்வுக் கதைகளை எழுதியிருக்கிறார். 'அமராவதியின் பூனை' என்ற அவரது கதை குறிப்பிடத்தக்கது. ஆனால் பெரும்பாலான கதைகளில் சொற்களின் புதருக்குள் கதையைச் சிக்கவைக்கும் உத்தியையே அவரும் மேற்கொண்டிருக்கிறார். எஸ்.பொன்னுதுரை உட்பட பலரும் செய்துவந்த விஷயம் அது.

மேலே குறிப்பிட்ட தமிழ் பாலுணர்வுக்கதைகளில் பாலுணர்வுக்கூறு சற்றே மேலோங்கியிருக்கிறதே ஒழிய அவை முழுமையான பாலுணர்வுக்கதைகள் அல்ல என்றுதான் சொல்ல வேண்டும்– மீனின் சிறகுகள் விதிவிலக்கு. பாலுணர்வுக்கதை என்பது தன் மையக்கருவாகவே பாலுணர்வை எடுத்துக் கொண்டிருக்கும். அதைப் பற்றி கூர்ந்த அவதானிப்புடன் விவாதிக்கும். அதை நுண்ணிய விவரிப்புடன் சித்தரித்துக் காட்டும். அதன் மனநிலைகளை பல தளங்களில் விரித்துச் செல்லும்.வெறுமே கிளர்ச்சியுறசெய்வது மட்டுமல்ல அதன் நோக்கம். அது ஒரு ரகசிய உலகை உருவாக்கி அளிக்கும்.

ஐம்பதுகளில் டி.எச்.லாரன்ஸின் எழுத்துக்களும் அறுபதுகளில் ஆல்பர்ட்டோ மொரோவியோவின் எழுத்துக்களும் தமிழ்நாட்டில் பாலுணர்வெழுத்துக்களின் சிறப்பான முன்னுதாரணங்களாக இலக்கிய தனிநபர்பேச்சுகளில் முன்வைக்கப்பட்டன. எழுபதுகளில் ஹென்றி மில்லர். இவ்வெழுத்துக்கள் ஒவ்வொன்றும் தங்கள் எல்லையை தாங்களே தாண்டி வந்திருக்கின்றன என்பதைக் காணலாம்.

பாலுணர்வெழுத்திற்கும் பாலியல்கவர்ச்சி எழுத்துக்கும் என்ன வேறுபாடு? வெறுமே சற்று நேரம் நமக்கு ஒரு மனச்சித்திரத்தின் இன்பத்தை மட்டுமே அளித்து நின்றுவிடுவது பாலியல்கவர்ச்சி எழுத்து. இலக்கியம் எந்த வகையானாலும் அது நம்மை நாமே அறியச்செய்யும். கூர்ந்து நோக்க வைக்கும். நமக்குள் நம்மைக் கொண்டுசெல்லும். அதுவே முக்கியமான வேறுபாடு.

என் நோக்கில், நல்ல பாலுணர்வெழுத்து என்பது சில இயல்புகள் கொண்டது. அது எந்நிலையிலும் அழகாகவே இருக்கும். பகற்கனவுகளுக்கு மட்டுமே உரிய மென்மையான அழகு அது. தொட்டால் பொலபொலவென உதிர்ந்துவிடக்கூடிய, பிறரிடம் பகிர முடியாத அழகு. எல்லா இலக்கிய ஆக்கங்களைப் பற்றியும் சொல்வதுதான் இது, நல்ல பாலுணர்வெழுத்து குறைவாகவே சொல்லி வாசகனின் கற்பனையைத் தூண்டும். அவனுடைய அந்தரங்கமான கனவுகளில் மட்டுமே அது முழுமையடையும்.

மனத்திரிபு நிலைகளை எழுதுவது பாலுணர்வெழுத்து அல்ல. அதை வேறு வகைமையில்தான் சேர்க்க வேண்டும். மனதை சிதைப்பதும் வதைப்பதும் பாலுணர்வெழுத்தின் இயல்பல்ல. பாலுணர்வெழுத்து இனிய மனக்கிளர்ச்சி ஒன்றை மட்டுமே அளிக்கும். அதன் உச்சியில் ஒரு வகை தனிமையின் துயரையும், இழப்பின் ஏக்கத்தையும் சொல்லி முடியக்கூடும். எப்போதும்

அது மூளைக்குள் பரவும் இனிய தென்றலாகவும் கற்பனையில் விரியும் இளவெயிலாகவுமே இருக்கும்.

எங்கெல்லாம் இலக்கியம் இருக்கிறதோ அங்கெல்லாம் பாலுணர்விலக்கியமும் உண்டு. பழங்குடிப் பாடல்கள் முதல் பேரிலக்கியப் பரப்பு வரை. வேதங்களில், பைபிளில்.இந்திய காவிய மரபின் இரு உச்சங்களான கம்பனையும் காளிதாசனையும் பாலுணர்வெழுத்தின் இரு சிகரங்களாகவே சொல்ல வேண்டும்.

ஏனென்றால் மனிதர்களுக்கு பாலுணர்வெழுத்து மிகவும் தேவையாகிறது. அது ஓர் அடிப்படையான இச்சை. இச்சைகள் அனைத்துமே ருசிகள். ருசிகளே அழகுகளாக ஆகின்றன. மனிதன் தன் கற்பனையை பாலுறவுசார்ந்து முடிவிலாது விரித்துக் கொண்டாகவேண்டியிருக்கிறது. அது அவன் வாழ்வின் மீது கொள்ளும் ஆசையின் ஒரு வெளிப்பாடேயாகும். நம் கலைகளில் பாலுணர்வென்பது வாழ்வாசையின் மன எழுச்சியாகவே எப்போதும் வெளிப்பாடு கொள்கிறது.

இயற்கை நமக்கு உயிர்த்துடிப்பான வாழ்க்கையை ஒவ்வொரு கணமும் அளித்தபடியே உள்ளது. நாம் அமைத்துக் கொண்ட வாழ்க்கை நம்மை ஒவ்வொரு கணமும் விதவிதமான சிறைகளில் அடைத்துக் கொண்டே இருக்கிறது.பருவுடலால் அச்சிறைகளை மீற முடியாதபோது நாம் கற்பனையால் மீறிச் செல்கிறோம். ஒரு வயலினின் ரீங்காரம் கேட்டு நாம் மூடிய கான்கிரீட் அறைக்குள் இருந்துகொண்டே பூத்த வனாந்தரத்தில் உலவுகிறோம். எல்லா கலையும் மனிதனின் கற்பனையின் அடிப்படை அலகான படிமங்களால் ஆனதே.

கற்பனையில் இருந்து எப்படி காமத்தை விலக்க முடியும்? நல்ல பாலுணர்வெழுத்தும் ஓயாத படிமவெளியை உருவாக்கக் கூடியது. சுவர்களை மறையச் செய்யக்கூடியது. நம்மை கட்டற்ற பசுமை வெளியில் நிறுத்தக் கூடியது. அத்தகைய எழுத்துக்கள் தமிழில் இனிவரும் காலத்தில் உருவாகுமென எண்ணுகிறேன். தொழிலின் சிறையில் மனிதர்கள் அடைபடும்தோறும் அதற்கான தேவை அதிகரிக்கும்.

***

என் நண்பரும் வாசகருமான ‘கே.எஸ்’ இந்தியாவுக்கு வெளியே ஒரு பல்கலையில் பணியாற்றுகிறார். அசாதாரணமான வாசிப்பு கொண்டவர்.

கம்பன் முதல் நாயன்மார்கள் வரை. புதுமைப்பித்தன் முதல் சு.வேணுகோபால்வரை. ஆனால் இலக்கியம் பற்றி எப்போதும் ஒரு ஏளனத்துடன் மட்டுமே எதிர்வினையாற்றுவார். ஏன், எனக்கு தெரிந்து அவர் எதிலுமே நேர்நிலைக் கருத்துச் சொன்னதில்லை. அவர் வாழும் சூழல் என்னால் கற்பனைசெய்யக்கூடுவதல்ல.

ஆனால் அவ்வப்போது நல்ல பாலுணர்வுக் கவிதைகளை அனுப்புவார். எட்டுவரி இருக்கும், ஆனால் 'நேற்று இரவு முழுக்க அதை எழுதினேன்' என்பார். இரவெல்லாம் அந்த வரிகளுக்குள் இருந்திருக்கிறார் என ஊகிப்பேன். கவிதை மின்னஞ்சலில் வந்ததுமே தொடர்ந்து திருத்தங்களும் வரும். ஆச்சரியமாக எல்லாப்பாலுணர்வுக்கவிதைகளும் மிக நேரடியான உணர்வு வெளிப்பாடு கொண்டவை.

நேற்றுவந்த இரு கவிதைகள்தான் இக்கட்டுரைக்கே தூண்டுதலாக அமைந்தன.

மெய்க்காட்சி

=========

கண்கள் என்று ஏன் பெயர்?
தொட்டுச் சிலிர்க்க வைப்பதனாலா?
குத்தும் கூர்மையினாலா?
நாணிப் புதைந்துகொள்வதனாலா?

என் நாவின்
உரையாடலில்
சிலிர்த்து
விழித்தெழுவதனாலா?

உணர்வுகளின் தழலில்
சுட்ட செம்புபோல்
சிவந்து ஒளிர்வதனாலா?

என் இனிய
அதிகாலைத் துயிலில்
மெதுவாகத் தொட்டு
வருடிச் செல்வதனாலா?

என் துயரில்
அமுதூட்டுவதனாலா?

அவை
யான்நோக்காக்கால்
நிலம் நோக்கும்
நோக்குங்கால்
தான் நோக்கி
மெல்ல நகும்.

புலியாவது
========

பூனைக்குட்டிகளை உங்களுக்குப் பிடிக்குமா?
பூனைக்குட்டிகள் மிக அழகானவை
கரிய பளபளப்புள்ள மென்மயிர்.
அல்லது இளம்பொன்னிறம்.

வெம்மையானவை.
அடைக்கலம் தேடுபவை.
அன்பின் வருடலுக்கு
நெகிழ்ந்து கொடுப்பவை.
மழைக்குப்பின் எழும்
இளம்புல்பரப்பு போல
அவ்வளவு மென்மையானவை.
உயிர்துடிப்பானவை.

செந்நிறச் சிறுவாயுடன்
இளஞ்சிவப்புச் சிறு மூக்குநுனிபுதைத்து
தன்னுள் தான் ஒடுங்கி
தூங்குபவை.
பூனைக்குட்டிகள் எப்போதும்
பதுங்கியே இருக்கின்றன.

பூனைக்குட்டி சிலிர்தெழுவதைக்
கண்டிருக்கிறீர்களா?
மூச்சு ஒலிக்க

கண்கள் ஒளிர
வாய் திறந்து சீறி
கூர் உகிர்கள் எழுந்து வர?

புலி பதுங்குவது பாய்வதற்கே
பூனையும் புலியே.
மென்மையான அழகான
கைக்கடக்கமான
நல்ல புலி.

## (2) பாலுணர்வெழுத்து தமிழில்

ஜெ

பாலுணர்வு சார்ந்த எழுத்தில் தஞ்சை பிரகாஷின் இடம் பற்றி எழுதியிருந்தீர்கள். தமிழிலே இதுவரை எழுதியவர்களில் பாலுணர்வு எழுத்தை நுட்பமாகவும் கூர்ந்தும் எழுதியவர்கள் யார் யார் என்று சொல்லமுடியுமா? தஞ்சை பிரகாஷ் பற்றிய உங்கள் கருத்தே எனக்கும். [ஆனால் இந்த பாலுணர்வு எழுத்து என்ற உங்களுடைய கலைச்சொல் தான் எனக்கு சம்மதமாக இல்லை. ஸாரி. ஆனால் புரியவேண்டுமே என்பதற்காக பயன்படுத்துகிறேன்].

சாரங்கன்

அன்புள்ள சாரங்கன்,

தமிழில் பாலுணர்வு எழுத்தை எழுதுவதற்கு பலவகையான மனத்தடைகள் எழுத்தாளரிடமும் வாசகரிடமும் உள்ளன. வாசகரிடமுள்ளன என்பதுதான் முக்கியமானது. உண்மையில் வாசக ஏற்புதான் பாலுறவைச் சித்தரிப்பதன் அளவைத் தீர்மானிக்கிறது. அதாவது எழுத்தாளரின் நோக்கம் பாலுறவைச் சித்தரிப்பதாக இருக்கமுடியாது, அது மட்டுமே என்றால் அது இலக்கியம் அல்ல. மானுட இயல்பை, அதனூடாகத் தெளியும் வாழ்க்கைத்தரிசனத்தை வெளிப்படுத்துவதே அவ்வெழுத்தின் நோக்கமாக இருக்கும்.

அந்நிலையில் பாலுறவைச் சித்தரிக்கும்போது அது சரியான அளவிலிருந்தாகவேண்டும். மிகையாக ஆகிவிட்டது என்றால் வெறுமே அதிர்ச்சியோ பரபரப்போ அளித்து எதை நோக்கி வாசகனின் கவனத்தை ஆசிரியன் கொண்டுசெல்ல விரும்புகிறானோ அதை நோக்கி வாசகன் கற்பனை மூலம் செல்வதை தடுப்பதாக ஆகிவிடும். அதாவது காமமும் வன்முறையும் மிதமிஞ்சிய உணர்ச்சிகரமும் படைப்பின் மேல்மட்டத்தில் வாசகனைக் கட்டிப்போடும்தன்மை கொண்டவை.

கலைஞன் எப்போதுமே அளவாகச் சொல்லி வாசகனை ஊகிக்கவைக்கவே முயல்வான். உடைத்து வைப்பது வாசகன் செல்லும் பயணத்தை இல்லாமலாக்கிவிடுகிறது.கலையை நிகழ்த்தும் எழுத்தாளன் காமம், வன்முறை, உணர்ச்சிகரம் ஆகியவற்றை மிகமிக நுட்பமாக , தேவையான அளவுக்கு மட்டுமே கையாள்வான். வாசகனை சீண்டி அருகே கொண்டுவருமளவு இருக்கவும் வேண்டும், வாசகனிடமிருந்து நுட்பங்களை மறைக்குமளவு மிகையாகவும் இருக்கக்கூடாது.அந்த அளவை நல்ல கலைஞன் அவன் சமகாலத்துடன் அவன் கொண்டுள்ள மானசீகமான உரையாடல் வழியாகவே கண்டடைகிறான்.

அந்த அளவை எப்போதும் அவன் தீர்மானிப்பதில்லை, அவன் முன்னால் உள்ள உத்தேச வாசகர்களின் மனநிலையே தீர்மானிக்கிறது. உதாராணமாக பிரெஞ்சுப்பண்பாடு பாலுறவை சற்றே நெகிழ்வுடன் அணுகும் நோக்கு கொண்டது. பாலியலை நேருக்குநேர் நோக்கவும் மொழியில் வெளிப்படுத்தவும் அங்கு ஒரு முந்தைய மரபுத்தொடர்ச்சி உள்ளது. தமிழகமோ ஒழுக்கநெறிகளாலும் குடும்ப ஆசாரங்களாலும் இறுக்கமாக கட்டிவைக்கப்பட்ட ஒன்று. இங்கே பாலுறவை பொதுவில் பேசமுடியாது. பாலுறவுச் சித்தரிப்புகள் எப்போதுமே பதற்றத்தை உருவாக்குகின்றன.

ஆகவே பிரெஞ்சில் எழுதும் எழுத்தாளன் பாலுறவை எழுதும்போது உருவாகும் வாசக எதிர்வினையை விட பத்துமடங்கு எதிர்வினை தமிழில் உருவாகும். ஆகவே அங்குள்ள ஓர் எழுத்தாளன் எழுதுவதைவிட பத்துமடங்கு குறைவாகவே இங்கே பாலியலை சித்தரிக்கமுடியும். அதேபோல நேற்று பாலியலை எழுதினால் உருவாகும் அதிர்ச்சியை விட பாதியே இன்று உருவாகிறது. காரணம் நம் அளவுகோல்கள் மாறிவிட்டன. ஆகவே இன்றைய எழுத்தாளன் இன்னும் கூடுதலாகச் சொல்லி கலையமைதியை தக்கவைத்துக்கொள்ளலாம்.

ஆகவே ஒரு காலகட்டத்தில் அதிர்ச்சியூட்டும் பாலியல்சித்தரிப்பு என கருதப்பட்ட நூல் ஒரு தலைமுறைக்குள் சாதாரணமாகிவிடுகிறது. டி.எச். லாரன்ஸின் லேடி சேட்டர்லிஸ் லவர் நாவலை இப்போது வாசித்தால் இது எதற்காக நீதிமன்றத்தால் தடைசெய்யப்பட்டது, எதற்காக ஆசிரியர் அத்தனை பெரிய தாக்குதல்களைச் சந்தித்தார் என நாம் திகைப்போம்.

இன்றைய ‘எரியும் நூல்’ நாளை சாதாரணமாக ஆகிவிடும் என்பதில் ஐயமில்லை.

ஆகவே எந்த அளவுக்கு வெளிப்படையாகப் பாலியலை சொல்லியிருக்கிறது என்பது ஓர் அளவுகோலே அல்ல. அது அக்கலைஞன் அவன் கலைக்குள் தீர்மானிக்கும் அளவு மட்டுமே. படைப்பை மதிப்பிடவேண்டியது அதில் மானுட இயல்பை, வாழ்க்கை குறித்த முழுமைநோக்கை எப்படி வெளிப்படுத்தியிருக்கிறார் என்று மட்டும்தான். அதற்கு அவர் பாலியல்சித்தரிப்பை எப்படி பயன்படுத்தியிருக்கிறார் என்பதுதான். ஆகவேதான் ஆல்பர்ட்டோ மொரோவியோ இன்றைக்கு வெறும் பழங்கால பாலியல் எழுத்தாளர். டி.எச்.லாரன்ஸ் இன்றும் ஆர்வமூட்டும் கலையை படைத்தவர்

நவீனத்தமிழிலக்கியம் எழுதப்பட்ட காலம் முதலே நுட்பமாக பாலியலை எழுதிய பல படைப்புகள் வெளிவந்துள்ளன. நான் இதில் பாலியல்வேட்கையை எழுதிய படைப்புகளைச் சுட்டவில்லை. கு.ப.ராஜகோபாலன் முதல் வண்ணதாசன் வரை அது ஒரு தனி மரபு. நான் கூறுவது பாலியல்சித்தரிப்பினூடாக வாழ்க்கையை காட்டிய படைப்பாளிகளைப்பற்றி.

முதன்மையாக சொல்லவேண்டிய படைப்பு அ.மாதவையா எழுதிய முத்துமீனாட்சி. அன்றைய பிராமணக்குடும்பங்களில் பெண்களுக்கு இழைக்கப்பட்ட வதையைச் சித்தரிக்கும் வலுவான நாவல் இது. சிறுமியை பணத்திற்காகத் திருமணம் செய்து கொடுத்துவிட்டு அவளை பாலுறவுக்கு தயாராக்கும்பொருட்டு வன்முறையால் வயதுக்குவரச்செய்யும் சித்தரிப்பே தமிழின் முதல் நேரடியான பாலியல் சித்தரிப்பு

தமிழின் எல்லா போக்குகளுக்கும் புதுமைப்பித்தனிடம் முன்னுதாரணம் இருக்கும் என்பார்கள். அவரது விபரீத ஆசை தமிழ் பாலியல்சித்தரிப்பு எழுத்தின் முக்கியமான முன்னுதாரணம். நண்பனின் பிணத்தருகே அவன் மனைவியுடன் உறவுகொள்வதன் விசித்திரமான சித்தரிப்பு இக்கதையை ஆழ்ந்த மனக்கொந்தளிப்பை நோக்கிக் கொண்டுசெல்கிறது. ஆனால் இவையிரண்டுமே இருவகை தொடக்கங்கள் மட்டுமே.

சமூக அவலங்களை சித்தரிப்பதில் மாதவையாவும் பாலுறவின் முனையில் மானுட உளநிகழ்வை ஆராய்வதில் புதுமைப்பித்தனும் இரு வழிகளைக் காட்டினர். ஆனால் அவை பெரிதாக முன்னெடுக்கப்படவில்லை. ஏனென்றால் தமிழில் மென்மையான ஆண்பெண் சல்லாபத்திற்கு இருந்த வரவேற்பு இப்படி உடைத்து உட்சென்று நோக்கும் இரக்கமற்ற அணுகுமுறைக்கு இருக்கவில்லை. காமச்சித்தரிப்பின் மிகப்பெரிய பிரச்சினையே அது கற்பனாவாதமாக இருக்கமுடியாது என்பதுதான். அந்தக் கறார்தன்மை எளிய வாசகர்களுக்கு எப்போதும் உவப்பானது அல்ல.

எஸ்.பொன்னுத்துரையின் ‘சடங்கு’அவ்வகையில் தமிழில் நிகழ்ந்த அபூர்வமான ஒரு முன்னெடுப்பு. மிகச்சரியாக பாலியல்சித்தரிப்பு கலையாவதன் சிறந்த உதாரணம் அது. மு.தளையசிங்கத்தின் தொழுகை, கோட்டை போன்ற கதைகளையும் குறிப்பிடலாம்.

ஜானகிராமனின் அம்மாவந்தாளில் நுட்பமான பாலுறவுச்சித்தரிப்பு உள்ளது என்றாலும் அவரது மரப்பசுதான் அதில் அவர் குறிப்பிடும்படி முன்னகர்ந்த படைப்பு என்று சொல்லமுடியும். அதிலுள்ள பாலியல்சித்தரிப்பு பெண்ணின் நோக்கில் அமைந்திருப்பதும் முக்கியமானது. ஆனால் ஜானகிராமன் பெரும்பாலும் கிழித்து உட்புக விழைவதில்லை. மென்மையாக சுற்றிச்செல்லவே முயல்கிறார். அவரது எழுத்திலுள்ளது பெரும்பாலும் ஆண்பெண் சல்லாபத்தின் சித்தரிப்பே. அது தமிழில் முக்கியமான முன்னுதாரணம்.

ஜி.நாகராஜன் அடுத்த கட்டத்தைத் தொடங்கி வைத்த படைப்பாளி என்று சொல்லலாம். அவரது இரு படைப்புகள், குறத்திமுடுக்கு , நாளை மற்றுமொரு நாளே பாலியல் சித்தரிப்பை நுண்ணிய அகவெளிப்பாடாக ஆக்கியவை. அவரது ‘நான்செய்த நற்செயல்கள்’ போன்ற சிறுகதைகளையும் குறிப்பிட்டுச் சொல்லலாம். மெல்லிய அங்கதத்துடன் பாலுறவுச்சிக்கலை, ஒழுக்கமற்ற வாழ்வுச்சூழலைச் சொன்ன நாகராஜன் அக்காரணத்தாலேயே ஒரு முக்கியமான முன்னுதாரணமாக ஆனார்

அவ்வகையைச் சேர்ந்த ‘எங்கோ எப்போதோ யாருக்காகவோ’ போன்ற சில கதைகளை ஜெயகாந்தனும் எழுதியிருக்கிறார்.

தமிழில் பாலியல்சித்தரிப்பு எழுத்தில் முக்கியமான திருப்புமுனை என்றால் ராஜேந்திர சோழன் எழுதிய புற்றில் உறையும் பாம்புகள் போன்ற

சிறுகதைகளையும் **சிறகுகள் முளைத்து**... என்னும் சிறிய நாவலையும் [இது அஸ்வகோஷ் என்னும் பெயரில் அவர் எழுதியது] சுட்டிக்காட்டலாம். அவை அக்காலகட்டத்தில் ஆழமான விவாதங்களை உருவாக்கியவை. ஒழுக்கநெறிகளுக்கு அப்பால் பாலுறவுத்தளத்தில் நிகழும் நுட்பமான சுரண்டலை ஆழமாகச் சித்தரித்தவை அவரது ஆக்கங்கள்.

அடுத்த கட்ட நகர்வு என்று நான் சு.வேணுகோபாலைத்தான் சுட்டிக்காட்டுவேன். ஒருவகையில் தமிழிலக்கியத்தில் பாலுறவின் நுண்ணிய சிடுக்குகளுக்குள் தயக்கமே இன்றி நுழைந்த முதல் கலைஞர் என்றே அவரைச் சொல்ல முடியும். அவருக்கு அடிப்படையில் மானுட நல்லியல்பு மேல் நம்பிக்கையே இல்லையோ என்று தோன்றும். காமம் தேரும் விலங்குகள் என மக்களை பார்க்கும் அவரது பார்வையில் இருட்டின் ஒரு துளிகூட தப்புவதில்லை.

இன்றைய இளைஞர்கள் உடல்சித்தரிப்பை மேலும் விரிவாக எழுதுகிறார்கள். எஸ்.செந்தில்குமார், ஜே.பி.சாணக்யா,கே.என்.செந்தில், வா.மு.கோமு போன்றவர்களின் கதைகள் இன்னும் நேரடியான சித்தரிப்பை முன்வைப்பவை. அந்த நேரடித்தன்மையால் அவ்வப்போது நுட்பங்கள் இல்லாமலாவதையும் காண்கிறேன். காமத்தை எழுதுவது என்பது காமத்தைத் தூண்டுவது அல்ல, அது கலைஞனின் வேலை அல்ல. காமத்தை மானுடனின் முதன்மையான வெளிப்பாட்டுக்களங்களில் ஒன்று என்று காண்பவனே கலைஞன்

## (3) பாலியல் எழுத்தா?

ஜெ,

நீங்கள் எழுதிய ஒருகணத்திற்கு அப்பால் என்ற கதையை வாசித்தேன். பல அடுக்குகள் கொண்ட ஆழமான கதை என்று தெரிந்தாலும் நீங்கள் எதிர்பாராதபடி ஒரு போர்ன் கதை எழுதியது எனக்கு மிகுந்த அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இதை நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்றாலும் நான் சொல்லவேண்டும் என்பதனால் இதை எழுதியிருக்கிறேன். இதை நீங்கள் எழுதத்தான் வேண்டுமா? இதைப்போலத்தான் பலரும் இன்றைக்கு எழுதிக்கொண்டிருக்கிறார்களே?

சந்திரசேகர்

அன்புள்ள சந்திரசேகர் ,

ஒன்று ஒருகணத்திற்கு அப்பால் பாலியல்கதை அல்ல. பாலியல்சித்தரிப்பு, பாலியல் உணர்ச்சிவிவரணை, பாலியல் சார்ந்த உலகுக்குள் வாசகனைக் கொண்டுசெல்லுதல் ஆகிய அம்சங்கள் கொண்டதுதான் பாலியல்கதை. அதன் நோக்கம் பாலியல் கிளர்ச்சியை உருவாக்குவது மட்டுமே.

ஒரு கணத்திற்கு அப்பால் பாலியல்கேளிக்கை உலகைப்பற்றிய கதை. அவ்வுலகை குறியீடாக்கி அதற்குமேல் பேசிச்செல்லும் கதை. அதில் பாலியல் சித்தரிப்போ, உணர்ச்சிவிவரணையோ இல்லை. அதுபேசும் உலகமே வேறு

இப்படி ‘பல அடுக்குகள் கொண்ட ஆழமான’ கதைகளைத்தான் பிறர் எழுதுகிறார்களா? அவர்கள் எழுதும் எளிய பாலியல் சித்தரிப்புகளுக்கும் இதற்குமான வேறுபாடு தெரிந்த வாசகர்களுக்கு மட்டுமே நான் எழுதுகிறேன்.

இதைப் புதியதாக எழுத ஆரம்பிக்கவும் இல்லை. என் எழுத்துலகில் ஆரம்பகாலம் முதலே இத்தகைய கதைகள் உள்ளன. பாலுணர்வு, அருவருப்பு, வன்முறை எதுவானாலும் என்னுடைய கற்பனையின் தேடல் எங்கு கொண்டுசெல்கிறதோ அங்கு தடையின்றி நுழைவதே என் பாணி

மிகத்தொடக்ககாலத்திலேயே பலகதைகளை இதே தளத்தைச் சார்ந்து எழுதியிருக்கிறேன். ‘கண்ணன் ஒரு கைக்குழந்தை’ பிரபல போர்ன்

நடிகையான லோலோ ஃபெராரியைப்பற்றியது. ஒருகணத்துக்கு அப்பால் என்ற இந்தக்கதையே முடிவின்மையின் விளிம்பில் என்ற பழைய கதையின் தரிசனதளத்தின் நீட்சிதான்

## (4) இலக்கியமும் பாலுணர்வும்

வணக்கம் ஜெயமோகன்,

ஒரு படைப்பாளிக்கு சமூகப் பொறுப்புணர்வு அவசியமா? இல்லை தனது புனைவுலகத்தில் எவ்வித வக்கிரங்களையும், இழிசெயல்களையும் திணித்து எழுதுவது படைப்பாளியின் தனிப்பட்ட உரிமையா? என்கிற கேள்வி எனக்குள் சமீப காலங்களாக எழுகிறது என்றால் சில இளந்தலைமுறை படைப்பாளிகளின் கதையைப் படிக்க நேர்ந்த போதுதான். மனித அறத்தை வலியுறுத்திதான் நமது பண்டைய இலக்கியங்கள் படைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இன்றைக்கு கட்டுடைத்தல் என்கிற எண்ணமோ தெரியவில்லை படைப்பு என்பது சுய அரிப்பைத் தீர்த்துக்கொள்ளும் களமாக இருப்பதாகவே தோன்றுகிறது. குறிப்பாக பாலியல் சார்ந்த வக்கிரங்கள்தான் இன்றைக்கு இலக்கியமாக ஏற்றுக்கொள்ளப்படுமோ? என்கிற கேள்வியும் எனக்குள் எழுகிறது.

பாலியல் அற்ற இலக்கியம் என்பதை நான் கோரவில்லை. பாலியல் என்பது ஒரு தாகம், பசி அது இன்றியமையாதது என்றாலும் சமீபகாலப் படைப்புகள் அதைக் கையாளும் விதம் மிகவும் வக்கிரத் தன்மையுடன் இருக்கிறது. தமிழில் ஓரினச்சேர்க்கை குறித்து பதிவு செய்த பசித்த மானிடத்தில் ஓரினச்சேர்க்கை குறித்து நேர்த்தியாக முகத்தில் அறையா வண்ணம் சொல்லப்பட்டிருக்கும். ஆனால் இன்றைக்கோ நிலைமை அப்படியில்லையே. உள்ளதைத்தானே சொல்கிறோம் என்று என்னதான் நியாயப்படுத்திக் கொண்டாலும் அது போன்ற படைப்புகள் படிக்கிறவர்களுக்கு பாலியல் கிளர்ச்சியைத் தூண்டுவதைத் தவிர்த்து என்ன செய்து விடப்போகிறது? ஆகவேதான் இக்கேள்வியைக் கேட்கிறேன் ஒரு படைப்பு என்பது படைப்பாளியின் தனிப்பட்ட உரிமை என்று விட்டுவிடலாமா? சமூகப் பொறுப்புணர்வுடன் படைக்க வேண்டியது படைப்பாளியின் கடமை இல்லையா?

பதிலை எதிர்நோக்கும்

கிருஷ்ணவேணி

அன்புள்ள கிருஷ்ணவேணி

நவீன இலக்கியம் ஒரு கட்டற்ற வெளி. பொதுவான அறிவுவெளி என்பது சபைநாகரிகத்தால் ஆனது. ஆகவே உள்ளே வருகையில் ஓர் அதிர்ச்சி ஏற்படுவதைத் தவிர்க்கமுடியாது

நவீன இலக்கியத்தைக் கட்டுப்படுத்தக் கூடாது. அப்படி கட்டுப்படுத்தும்போது எவர் கட்டுப்படுத்துவது, எந்த அடிப்படையில் என்ற வினா எழுகிறது. இலக்கியத்தின்மேல் இன்னொரு தரப்பின் அதிகாரம் வந்து விழுகிறது. அதன்பின் இலக்கியம் இல்லை. இலக்கியத்தின் சாரம் என்பது ஞானத்தேடல். சுதந்திரத்தில் இருந்தே அது வரமுடியும். சுதந்திரம் என்பது முழுச்சுதந்திரம்தான்.

ஆகவே அது எப்போதும் இப்படி குப்பையும் கூளமும் மலரும் கனியுமாகத்தான் இருக்கும். உங்களுக்குத்தேவையானதை நீங்கள் எடுத்துக்கொள்ளவேண்டும். பிறவற்றைக் கடந்துசெல்லவேண்டும்.

பாலுணர்வு பலவகையில் இலக்கியத்துக்கு இன்றியமையாது.

1. அது மானுடமனத்தின் ஆழம். ஆகவே மானுட அகத்தை எழுதும் படைப்பாளி அதை எழுதிக்கொண்டே இருப்பான். என்றும் எப்போதும் பாலுணர்வு இலக்கியத்தின் அடிப்படைகளில் ஒன்று.

2 பாலுணர்வுத்திரிபு நிலை மானுட மனதின் உச்சகட்டநிலை. இலக்கியம் சாதாரணநிலைகளை விட திரிபு நிலைகளை அதிகம் கவனிக்கும். அந்நிலையில் நாம் பேசும் அன்பு அறம் உறவு போன்றவற்றின் மதிப்பென்ன என்று ஆராயும்., ஆகவே காமம், வன்முறை ஆகியவற்றைப்பற்றி அது எப்போதும் கவனம் கொண்டிருக்கும்.

3 பாலுணர்வு என்பது அழகியலுடன் தொடர்புடையது. அழகும் பாலுணர்வும் பிரிக்கமுடியாதவை. அழகை உருவாக்க பாலுணர்வை எழுதியே ஆகவேண்டும்

இலக்கியம் என்பது பாலுணர்வை எழுதுவதனூடாக வாழ்க்கையை அழகாக்கும். நுணுகி அறியவைக்கும். அப்படி நிகழவில்லை என்றால் அது எளிய பாலுணர்வுக் கேளிக்கை எழுத்து. அதைக் கடந்துசெல்லுங்கள்

ஆகவே இலக்கியம் எப்போதும் இப்படித்தான் இருந்தது, இருக்கும். இன்றைய எந்த எழுத்தாளனும் மகாபாரதத்தைவிட பாலுணர்வை, பாலியல் திரிபை எழுதிவிடவில்லை.

## (5) பாலுணர்வை அறிதலும் எழுதுதலும்

சமீபத்தில் ஓர் இளம் எழுத்தாளர் எழுதிய நாவலை வாசித்தேன். பாலியல் நிகழ்ச்சிகளை விரிவாக எழுதியிருந்தார். ‘துணிந்து’ எழுதியிருப்பதாக அவர் எண்ணிக்கொண்டிருந்திருக்கலாம். இதற்குமுன் இல்லாதவகையில் எழுதியிருப்பதாக பெருமிதம் கொண்டிருக்கவும்கூடும். இளம்வாசகர்கள் சிலர் அதை வாசித்து “ஆகா!” போட்டிருக்கலாம். அப்படி ஒருவர் கவனம் பெற்றுவிட்டால் பலர் உருவாகி வருகிறார்கள்.

தமிழ்நாட்டில் பாலியல்வரட்சி மிகுதி. ஆகவே என்றுமே பாலியலெழுத்துக்கு வாசகர்கள் அதிகம். அத்துடன் பெரும்பாலான வாசகர்கள் பாலுறவு மட்டுமே வாழ்க்கை என எண்ணிக்கொண்டிருக்கும் முதிரா இளமையில் வாசிக்க வருகிறார்கள். அவர்கள் இவ்வகை எழுத்துக்களையே தெரிவுசெய்கிறார்கள். அவர்களில் சிலரே அடுத்தகட்ட வாசிப்புக்கு வருகிறார்கள்

இன்று எழுதுபவர்கள் தாங்கள் துணிச்சலாக எழுதுபவர்களாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் எல்லா காலகட்டத்திலும் எழுத்தாளர்கள் அவ்வாறு ‘துணிந்து’ எழுதுவது நடந்துகொண்டேதான் இருக்கிறது. அத்துணிவான எழுத்து இருபதாண்டுகளுக்குள் சாதாரணமாக ஆகிவிடுகிறது, அடுத்த தலைமுறை வந்து மேலும் துணியவேண்டியிருக்கிறது.

உண்மையில் இதில் துணிவென்று ஏதும் இல்லை. ஒவ்வொரு காலகட்டத்தில் சமூகவெளியில் பாலியல்வெளிப்பாட்டுக்கு ஓர் எல்லை ஒருவகையான பொதுப்புரிதலாக உருவாகி நிலைகொள்கிறது.. அந்த எல்லையை எந்த அளவுக்கு மீறவேண்டும் என்பதை அந்தப்படைப்பின் ஆசிரியன் முடிவெடுக்கிறான். அதற்கு அளவீடாக இருப்பது அந்தப் படைப்பு எந்த அளவுக்கு பாதிப்பை உருவாக்கவேண்டும், எப்படிப்பட்ட பாதிப்பை உருவாக்கவேண்டும் என்ற கணிப்புதான்.

உதாரணமாக, மென்மையான உள்ளமோதல்களைச் சொல்லும் ஒரு காதல்கதையில் அப்பட்டமான உடலுறவுக்காட்சி விரிவாக விவரிக்கப்பட்டிருந்தால் அதன் அழகியல் ஒருமை சிதையும். வாசகனிடம் உருவாக்கும் அதிர்வு அந்த படைப்பை அந்த பாலுறவுக் காட்சியை அடிப்படையாகக் கொண்டு யோசிக்கவைக்கும். அவனுக்கு அதிர்ச்சியை அளித்து அதிலுள்ள நுண்மையான காட்சிகள் அவனுடன் தொடர்புறுத்தமுடியாமல் செய்யும். மென்மையான வண்ணங்கள் நடுவே அடர்வண்ணங்களைச் சேர்ப்பதுபோலத்தான் அது. எந்த வண்ணத்தையும் ஓவியத்தில் பயன்படுத்தலாம். எவ்வாறு கலக்கிறோம் என்பதே கேள்வி. இ

இந்த அளவீடு மாறிக்கொண்டே இருக்கும் விதம் வியப்பூட்டுவது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்புள்ள கவிதைகளில் உடல்வர்ணனைகளும் உடலுறவு வர்ணனைகளும் ஏராளமாக உள்ளன. தமிழிலும் சரி, சம்ஸ்கிருதத்திலும் சரி பெண்ணுடலின் வர்ணனைகள் கட்டற்று சென்றிருக்கின்றன. மானின் குளம்புபோல என பெண்குறியை வர்ணிக்கும் இடம்வரை. ஆனால் எங்கும் ஆண்குறி வர்ணனை இல்லை. ஏனென்றால் அது அன்றைய சமூகத்திற்கு அதிர்ச்சி அளித்திருக்கலாம். சுவைத்திரிபு உருவாகியிருக்கலாம்.

நவீன இலக்கியம் உருவானபோது பாலியலெழுத்து கடுமையான தணிக்கைக்கு உள்ளானது – வாசகனாலும் எழுத்தாளனாலும். ஆகவே இடக்கரடக்கல்கள் உருவாயின. அன்றைய விக்டோரிய ஒழுக்கவியல் ஒரு காரணம் என்றாலும் அதைவிட முக்கியமான காரணம் நவீன இலக்கியம் அச்சு வழியாக மேலும் பரவலாகச் சென்றது, இன்னும் பெரிய மேடையை அடைந்தது என்பதுதான். பழங்காலக் கவிதைகள் சிறிய அரங்குகளுக்கும், அவைகளுக்கும் உரியவை. அங்கே கவிச்சுவை நுகரவந்த அறிஞர்களே இருந்தனர். நவீன இலக்கியத்தில் பொதுமக்கள் வாசகர்களாக அமைந்தனர். ஆகவே ‘தெருவில்நின்று’ பேசுவனவே இலக்கியத்திலும் அமையவேண்டும் என்ற உளநிலை அமைந்தது.

ஆனால் ஒவ்வொரு படைப்பும் அந்த எல்லையை முட்டி விரிவாக்கிக் கொண்டே இருந்தது. தமிழிலக்கியத்தில் புதுமைப்பித்தன் பாலுறவை எப்படி எழுதியிருக்கிறார் [விபரீத ஆசை] தி.ஜானகிராமன் எப்படி எழுதியிருக்கிறார் [அம்மா வந்தாள், தண்டபாணி- அலங்காரம் உறவு] ஜி.நாகராஜன் எப்படி எழுதியிருக்கிறார் [நாளை மற்றுமொருநாளே கந்தன்- வள்ளி உறவு] என்று கூர்ந்து வாசிப்பவர்களால் அந்த எல்லை தள்ளித்தள்ளி வைக்கப்படுவதைக் காணமுடியும்.

ஏன் தள்ளிவைக்கப்படுகிறது என்றால் ஒரு காட்சி சற்று அழுத்தமான பாதிப்பை உருவாக்கவேண்டும் என்று விரும்பும் எழுத்தாளன் முன்பு எழுதப்பட்டு பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட அளவை விட சற்றே முன்னகர்ந்து அதைச் சித்தரிப்பான். மிகவும் முன்னகர்ந்துவிட்டால் அது சுவைத்திரிபு ஆகிவிடுமென்றும் அறிந்திருப்பான். நம் சமூகத்தின் அளவுகோல் மேலைநாடுகளை விட இன்னும் இறுக்கமானது. ஆகவே நாம் பாலியலை எழுதும்போது மேலைநாடுகள்போல எழுதுவதில்லை. எழுதினால் அது அதைமட்டுமே பேசும் நாவலாக ஆகிவிடும். ஒரு ஓவியத்திரைச்சீலையில் நீலமோ. கருமையோ கையாளப்பட்டால் அந்த ஓவியத்தின் மையநிறமே அதுவாக இருக்கவேண்டும் என்பதுபோல. ஆகவே பாலியல் எழுத்தைத் துணிச்சலாக எழுதுவது என்பதொன்றும் சிறப்பல்ல. எல்லா எழுத்தாளர்களும் தேவையான துணிச்சலுடன்தான் எழுதுகிறார்கள்

ஆனால் அவ்வாறு எழுதுபவர்களில் எத்தனைபேர் அதை நுட்பமாக, மெய்யாக எழுதுகிறார்கள்? கணிசமான தமிழ் எழுத்தாளர்கள் பாலியல்வரட்சியால் அவதிப்படுபவர்கள். பூஞ்சையான உள்ளமும் அதற்கேற்ற சம்பிரதாயமான வாழ்க்கையும் கொண்டவர்கள். ஆகவே அனுபவத்திலிருந்து எவரும் எழுதுவதில்லை. பெரும்பாலும் அவை பகற்கனவின் சித்தரிப்புகள். தஞ்சைப் பிரகாஷ் எழுதியதைப்போல. ஆகவே பகற்கனவுகளை நாடுபவர்களால் வாசிக்கத்தக்கவை

உதாரணமாக ஜி.நாகராஜனின் நாளை மற்றுமொருநாளே நாவலில் கந்தன் மீனாவுடன் உறவுகொண்டு முடிந்ததும் மீனா சுருண்டு கிடந்து அழுகிறாள்.

உளஅழுத்தம் கொண்ட பெண்களின் இயல்பு அது. அந்த அழுகைக்குப்பின் அவள் அதற்கான காரணமாக காணாமல்போன தன் மகனைப்பற்றி நினைத்துக்கொள்கிறாள். இது ஆசிரியரின் நுண்ணிய அனுபவ அவதானிப்பின் வெளிப்பாடு. இத்தகைய இடங்கள் தமிழிலக்கியத்தில் மிகக்குறைவே.

ஆனால் பாலியல் அறியாமையின் வெளிப்பாடுகள் நிறைய. சமீபத்தில் கர்நாடகத்தில் அருவிப்பயணத்தின்போது காரில் இதைப்பற்றிப் பேசிக்கொண்டு சென்றோம். நான் ஜெயகாந்தனிடம் பேசிக்கொண்டிருந்தபோது அவர் சொன்னதைச் சொன்னேன். 'பெண்களுக்கு காமத்தில் உடலின்பம் கிடையாது, உள்ளத்தால்தான் இன்பம் அனுபவிக்கிறார்கள்' என்றார் ஜெயகாந்தன். அவரை நேரில் மறுக்கமுடியாது. நான் வியப்புடன் கேட்டுக்கொண்டிருந்தேன். பாலகுமாரனின் மெர்க்குரிப்பூக்களில் ஓர் இடம் வரும். பெண்களுக்குப் பாலியல் இன்பம் என்பது உடலில் அல்ல 'அய்யோ இந்த ஆம்புளைக்கு என்னாலே எவ்வளவு சந்தோஷம்' என்று நினைப்பதில்தான் என்கிறார் ஆசிரியர்.

இது தமிழகத்தில் மட்டுமல்ல இந்தியாவிலேயே எண்பதுகள் வரை பரவலாக இருந்த எண்ணம். எழுபதுகளில் டாக்டர் பிரமிளா கபூர் என்ற ஆய்வாளர் தன் மாணவிகளைக்கொண்டு ஒரு பாலியல் கணக்கெடுப்பை நிகழ்த்தினார். இந்தியப்பெண்களில் மிகப்பெரும்பான்மையின பாலுறவுச்சம் குறித்து ஏதும் அறியாதவர்கள் என்றது அந்த ஆய்வு. பலர் வாழ்நாள் முழுக்க ஒருமுறைகூட அதை அடையாதவர்கள். ஆண்களில் அனேகமாக எவருக்கும் அப்படி ஒன்று பெண்களுக்கு உண்டு என்றே தெரியாது.அன்று மிக அதிகமாகப் பேசப்பட்ட ஓர் ஆய்வுமுடிவு அது

இன்றும் அதே அறியாமை நிலவுகிறது. சாரு நிவேதிதாவின் சீரோ டிகிரி நாவலில் ஒரு 'பாலியல்வித்தகன்' ஒரு 'கள்ளமில்லா' பெண்ணுக்கு தன்னின்பம் செய்துகொள்ள தொலைபேசி வழியாகக் கற்றுக்கொடுக்கிறான்.அவன் சொல்லும் அந்த 'நுட்பமான' வழி என்பது

சுட்டுவிரலை உள்ளே விட்டு அசைப்பதுதான்.பெண்களுக்கு பெண்குறியின் உட்பகுதியில் நுண்ணுணர்வே இல்லை என்றும், பெண்கள் தன்னின்பம் கொள்ளும் வழிகளே வேறு என்றும் அந்த திறனாளனுக்குத் தெரியவில்லை. இதை அப்போது அந்நூலுக்கு எழுதிய மதிப்புரையிலேயே சுட்டிக்காட்டியிருந்தேன்.

பெரும்பாலும் எளிமையான பாலியல்புனைகதைகளில் இருந்தே தமிழ் இளைஞன் பாலியலறிவை அடைகிறான். அவை ஆண்களின் பகற்கனவை சீண்டும்பொருட்டு எழுதப்படுபவை. எழுத்தாளன் என்பவன் சற்றேனும் முறையாக பாலியலைக் கற்றிருக்கவேண்டும். எண்பதுகளில் நான் வாசிக்கவந்தபோது மலையாளத்தில் இ.எம்.கோவூரின் உரைகள் வழியாக பாலுறவியல் [sexology] வாசகர்களிடையே புகழ்பெற்றிருந்தது. அவர் வழியாகவே ஹாவ்லக் எல்லிஸ், ஆல்ஃப்ரட் சார்ல்ஸ் கின்ஸி இருவரைப்பற்றியும் அறிந்தேன். என் உலகப்புரிதலில் மிகப்பெரிய திறப்பை அளித்தன. அவர்கள் இருவரையும், அறியாதபோதுதான் நமக்கு தஞ்சைப் பிரகாஷ் பரபரப்பை அளிக்கிறார்

அந்த இருபெயர்களையுமே இளம் தலைமுறையினர் அறிந்திருக்கவில்லை என்று தெரிந்தமையால்தான் இந்தக்குறிப்பு.அவர்களைப்பற்றி எவரும் தமிழில் எழுதியும் நான் வாசித்ததில்லை. எண்பதுகளின் இறுதியில்நான் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறேன். இணையத்திலேயே அவர்களின் நூல்களை தரவிறக்கம் செய்யலாம் என நினைக்கிறேன்.

ஹென்றி ஹாவ்லக் எல்லிஸ் [Henry Havelock Ellis 1859 – 1939] உளவியலுக்கு ஃப்ராய்ட் எப்படியோ அப்படி பாலுறவியலுக்கு முன்னோடியான அறிஞர். லண்டனில் பிறந்தவர். லண்டன் கிங்ஸ் கல்லூரியில் மருத்துவப் படிப்பு முடித்தவர். பொதுவாக இடதுசாரி எண்ணங்கள் கொண்டிருந்தார்.கார்ல். மாக்ர்ஸின் மகள் எலியனேர் மார்க்ஸ் எல்லிஸின் அறிவுலகத் தோழமைகளில் ஒருவர். பெர்னாட் ஷாவுடனும் தொடர்பிருந்தது.ஒருபாலுறவைப் பற்றிய தன் முதல் நூலை

இன்னொருவருடன் சேர்ந்து ஜெர்மன் மொழியில் எழுதினார். பின்னர் அது ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யப்பட்டது

பாலுறவு குறித்து அன்றுவரை இருந்த பெரும்பாலான நம்பிக்கைகளும் புரிதல்களும் மதத்தலைவர்களால் உருவாக்கப்பட்டவை. ஒழுக்கவியலை அடிப்படையாகக் கொண்டவை. அது ஒரு மானுடச் செயல்பாடு என்றவகையில் தரவுகளின் அடிப்படையில் புறவயமாக அதை அணுகவேண்டும் என்ற கண்ணோட்டமே எல்லிசை ஒரு மாபெரும் முன்னோடியாக ஆக்கியது. தரவுகளைச் சேர்த்து அறிவியல் முறைமைப்படி ஆராய்ந்தபோது ஏராளமான பழைய நம்பிக்கைகள் சிதைந்தன. குறிப்பாக பெண்களின் பாலுணர்வு, பாலுறவுச்சம் குறித்த புதிய கொள்கைகள் வெளியாயின.

உதாரணமாக கந்து [ clitoris] பெண்களின் பாலுறவுவிருப்பத்தின் மையம் என்ற நம்பிக்கை அன்று இருந்தது. அது ஓர் நரம்பு முடிச்சே ஒழிய மையமல்ல என்று எல்லிஸின் ஆய்வுகள் காட்டின. பெண்களின் பாலுணர்வில் அவர்களின் பெண்ணுறுப்பின் உட்பகுதிகள் எவ்வகையிலும் பங்கெடுக்கவில்லை என்று நிறுவின. ஒருபாலுறவு போன்றவை உளப்பிறழ்வுகளோ தீயபழக்கங்களோ அல்ல, இருபாலுறவுபோலவே இயல்பான மூளைசார்ந்த தனிவிருப்பங்கள்தான் என்றும், புறத்தே தெரிவதைவிட ஒருபாலுறவு சூழலில் அதிகம் என்றும் அவருடைய ஆய்வுகள் காட்டின. அக்காலத்தில் எல்லிஸின் நூல்கள் தடைசெய்யப்பட்டன. ஆபாச இலக்கியம் படைத்தமைக்காக அவர் சட்டநடவடிக்கைக்கும் உள்ளானார்.

எல்லிஸின் ஆய்வுகளை நிறுவன உதவியுடன் மிகவிரிவான முறையில் ஆய்வுசெய்து அறிக்கைகளை உருவாக்கியவர் ஆல்ஃப்ரட் கின்ஸி. Alfred Charles Kinsey [ 1894 – 1956] . அமெரிக்க உயிரியலாளர். 1947 இவர் இண்டியானா பல்கலையில் நிறுவிய பாலுறவியல் ஆய்வு நிறுவனம் மானுடரின் பாலியல்பழக்கவழக்கங்களைப் பற்றி மிக விரிவான ஆய்வுகளை தொடர்ந்து வெளியிட்டது. இது Kinsey Institute for Research in Sex, Gender, and Reproduction என அழைக்கப்பட்டது. தன் மாணவர்களையும் தொழில்முறை

தகவல்சேகரிப்பாளர்களையும் கொண்டு பெருமளவில் தரவுகளைச் சேகரித்து ஒருங்கிணைத்து தன் கொள்கைகளை உருவாக்கி முன்வைத்து நிறுவினார் கின்ஸி.

Sexual Behavior in the Human Male (1948) மற்றும் Sexual Behavior in the Human Female (1953) ஆகிய இரு நூல்களும் கின்ஸி அறிக்கைகள் என்றபேரில் பொதுவாக சமூக, மானுடவியல் அறிஞர்கள் நடுவில்கூட பெரிதாக வாசிக்கப்பட்டன. அன்று திருவனந்தபுரம் தெருக்களிலேயே போலிப்பதிப்பாக இவை வாங்கக்கிடைத்தன. உலக அளவில் மானுடப் பாலியல்பழக்கங்களைப் புரிந்துகொள்வதற்கான முன்னோடி வழிகாட்டிகளாக இவை கருதப்படுகின்றன. சட்டம், ஒழுக்கவியல், இலக்கியம், சமூகவியல், மானுடவியல் ஆகியவற்றில் ஆழ்ந்த செல்வாக்கைச் செலுத்தின

கின்ஸியின் கணக்கெடுப்புகளைப் பற்றி பலவகையான ஐயங்களும் மறுப்புகளும் பின்னர் உருவாயின. அவர் நோயாளிகளையும் குற்றவாளிகளையும் தனியாகப்பிரித்து கணக்கிடவில்லை. பெரும்பாலும் வித்தியாசமான பாலுணர்வும் பழக்கங்களும் கொண்டவர்களை நேர்காணல் செய்தார். பாலுறவு குறித்த செய்திகளை அளிப்பவர்கள் நேர்மையாக சொல்லவேண்டுமென்பதில்லை, பலசமயம் அவர்கள் மிகையாக்கவோ நியாயப்படுத்தவோதான் பேசுவார்கள் – இவ்வாறெல்லாம் சுட்டிக்காட்டப்பட்டாலும் இன்றுவரை மானுடப்பாலுணர்வு குறித்து அறிவியல்நோக்கில் உருவாகியிருக்கும் பெரும்பாலான புரிதல்களுக்கான தொடக்கம் கின்ஸிதான்.

இன்று இவ்வறிதல்கள் வெகுவாக முன்னேறிவிட்டன. உடற்கூறியலில் பல்வேறு நவீன கருவிகள் வந்துவிட்டன. நரம்பியல் மிகப்பெரிய பாய்ச்சல்களை நிகழ்த்திக்கொண்டிருக்கிறது. பாலியல்கல்வியின் தேவை உலகளாவ உணரப்பட்டிருக்கிறது. பாலியல் நிபுணர்கள் ஊடகங்களில் தோன்றி விளக்குகிறார்கள். பாலியல் அறிதல் பரவலாகியிருக்கிறது. ஆனால் மறுபக்கம் பாலியல்தளங்கள் பெருகிவிட்டிருக்கின்றன. இவை

பாலுறவியலுக்கு நேர் எதிரான பகற்கனவு சார்ந்த புரிதலை உருவாக்குகின்றன. அவற்றைத்தான் இளைஞர்கள் மிகுதியாக பார்க்கிறார்கள். வருத்தமென்னவென்றால் எழுத்தாளர்களும் அவற்றையே பார்த்துக் கற்றுக்கொண்டு எழுதுகிறார்கள்

# (6) படைப்பு முகமும் பாலியல் முகமும்

அன்புள்ள ஜெயமோகனுக்கு,

'முதலில் வாசித்த தங்களின் படைப்பு. அதன் பின்பு, சமூக ஊடகங்களில் தங்களைப் பற்றி தொடர்ந்து நிகழ்ந்துவரும் பரப்புரைகளைக் கவனித்தேன். தாம் ஒரு 'இந்துத்துவ பயங்கரவாதி', 'ஆர் எஸ் எஸ் கைக்கூலி' என்ற பிம்பத்தையே அப்பதிவுகள் என்னுள் உருவாக்கின. 'ஒருத்தனுக்கு நெறைய எதிர்ப்பு இருக்குன்னா, ஒன்னு அவன் ரொம்ப நல்லவனா இருக்கணும், இல்லாட்டி ரொம்ப அயோக்கியனா இருக்கணும்'னு என் பள்ளிக்கூட வாத்தியார் சொல்லியிருக்கிறார். தங்களின் வலைதளப் பதிவுகளைப் படிக்கத் துவங்கிய பின், அவை சமூக ஊடகத்தால் என்னுள் உருவான பிம்பத்தை ஒண்ணுமில்லாமல் செய்தன.

அன்று தொடங்கி இன்று வரை, காலையில் கண் விழித்ததும் தங்களின் வலைப்பதிவுகள்தான் எனக்குப் பூபாளம். தங்களின் வலைப்பதிவுகளைத் தொடர்ந்து, 'அறம்', 'விஷ்ணுபுரம்' அகியவற்றை வாசித்தேன். 'காடு' வாசிக்க வாங்கி வைத்திருக்கிறேன். 'அறம்' புத்தகத்திலுள்ள ஒவ்வொரு கதையை வாசித்த பின்னரும், உள்ளம் பூரித்து, தங்களுக்குக் கடிதம் எழுத நினைத்ததுண்டு. ஏனோ எழுதவில்லை.

நீங்கள் அடிக்கடி குறிப்பிடுவது போல், நானும் வழிதவறி இலக்கியம் படிக்கத்தொடங்கியவன் தான். நான் என்றோ தற்கொலை செய்து மடிந்திருக்க வேண்டியவன். உலகில் அதிகமுறை தற்கொலை முயற்சி செய்தவர்களை பட்டியல் போட்டால், முதல் நூறு நபர்களில் எனக்கும் இடமுண்டு என்று நம்புகிறேன். பாருங்கள், ஒழுங்காக தற்கொலை செய்துகொள்ளக்கூட முடியாத கோழைதான் நான். ஆனால், இப்போதெல்லாம் தற்கொலை குறித்த எண்ணம் தோன்றுவதில்லை. காரணம் இலக்கியம். இலக்கியம் எனக்கு வாழ்வதற்கான நம்பிக்கையைக் கொடுக்கவில்லை; வாழவேண்டும் என்ற ஆசையைக் கொடுத்தது.

எங்கள் ஊர் அரசுப்பள்ளியில் நிறைய புத்தகங்களுண்டு, ஆனால் நூலகம் இல்லை. புத்தகங்கள் பிள்ளைகளின் கைகளை அடைந்து கிழிபடக்கூடாது என்ற நல்லெண்ணத்தில், பெரிய பெரிய மரப்பெட்டிகளில்,

பாச்சைகளுக்கும் கரையான்களுக்கும் இரையாக்கி வைத்திருந்தது பள்ளி நிர்வாகம். எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டுருந்த சமயம், புதிதாக வந்திருந்த பள்ளித் தலைமையாசிரியர், பெட்டியில் கிடந்த புத்தகங்களுக்கு விடுதலை அளித்து, எல்லா வகுப்பறையிலும் ஒரு கயிற்றைக் கட்டி, புத்தகங்களை அதில் தொங்கவிடச்செய்து, வகுப்பறை நூலகம் என்ற ஒன்றை உருவாக்கினார். அப்படித்தான் நான் முதன் முதலில் சுஜாதாவின் எழுத்துகளுக்கு என் வகுப்பாசிரியர் மூலம் பரிட்சயப்படுத்தப்பட்டேன். அந்த வயதில் இலக்கியம் குறித்த சுரணையெல்லாம் கிடையாது. ஏதோ நல்லாயிருந்தது படித்தேன்.

வாசிப்பு நன்றாகத்தான் போய்க்கொண்டிருந்தது. புத்தகங்களிருந்தால் அதற்கு எதிரிகள் உண்டல்லவா? பள்ளி வேளைநேரம் முடிந்ததும் ஒருநாள், சில அதிமேதாவிகள் ஒரு வகுப்பறையிலிருந்த புத்தகங்களுக்கு எப்படியோ தீ வைத்துவிட்டனர். இதற்கு முன்பாகவே அந்த தலைமையாசிரியரும் மாற்றலாகி வேறு பள்ளிக்குச் சென்றுவிட்டார். இதுதான் சமயம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தது போல் மீண்டும் அப்புத்தகங்கள் சிறைவைக்கப்பட்டன.

அத்துடன் நானும் பத்தாம் வகுப்பு வந்தேன். பொதுத்தேர்வில் நல்ல மதிப்பெண் பெற்றால்தான் வாழ்க்கை என்று சொன்னார்கள். பத்து பதினொன்று பனிரெண்டு, மூன்று ஆண்டுகள் வகுப்பறை சிறைவாசம். தலை நிமிர்த்திச் சொல்லுமளவுக்குக் கொஞ்சம் நல்ல மார்க் வாங்கி அருகிலிருந்த நகரிலேயே ஒரு நல்ல கல்லூரியில் படிக்க சீட்டும் கிடைத்தது. பனிரெண்டாம் வகுப்புவரை தமிழ்வழிக்கல்வி. கல்லூரியில் காணுமிடமெங்கும் ஆங்கில மயம். ஆங்கிலம் தெரியாத குற்றவுணர்வு, குறையுணர்வு. ஆங்கிலம் கற்கவேண்டும் என்ற வைராக்கியத்தோடு ஆங்கிலப்புத்தகங்களை, ஆங்கிலத்தில் கிடைத்த இலக்கியப்புத்தகங்ககளை, குறிப்பாக அகாதா கிறிஸ்டி நாவல்களை, நகரின் ரயில் நிலையத்திற்கு வெளியே மலிவு விலை புத்தகக் கடைகளில் வாங்கிப்படித்தேன். இல்லை டிக்ஸ்னரி உதவியுடன் கற்றேன். கிட்டதட்ட ஒரு வருடத்தில் ஆங்கிலம் கொஞ்சம் கைவசமானது.

பின்னர், அந்நகரில் இருந்த ஓர் அமைப்பில் சேர்ந்து ஆங்கிலம் கற்றேன். என் ஆங்கிலப் புலமை மெருகேறியது. பள்ளிப்படிப்பை நான் தமிழ் வழியில்தான் படித்தேன் என்று இப்போது சொன்னால் யாரும் நம்பமாட்டார்கள். இவ்வாறு

ஆங்கில புத்தகங்களைப் படித்ததில் ஆங்கிலப் புலமையோடு சேர்ந்தே கொஞ்சம் இலக்கிய ரசனையும் கிடைத்தது. அகாதா கிறிஸ்டியைக் கடந்து, Tolstoy, Dastovsky, George Orwell, Pablo Neruda, Alfred Camus, Franz Khafka, R K Narayan, Arundhati Roy ஆகியோரின் படைப்புகளைப் படித்தேன். பிற மொழியில் எழுதும் (எழுதிய) இந்திய எழுத்தாளர்களான தாகூர், மாகாஸ்வேதா தேவி, எம்.டி, தகழி, இஸ்மத் சுக்தாய், மான்டோ, அனந்தமூர்த்தி ஆகியோரின் எழுத்துகளும் எனக்கு ஆங்கில மொழிபெயர்ப்பின் மூலமே அறிமுகம்

இப்படி, ஆங்கிலத்தின் வழியாகத்தான் எனக்கு இலக்கிய ரசனையே வந்தது. அதன் பின்பு தான், தமிழில் தீவிர இலக்கியங்கள் என்று சொல்லத்தக்க படைப்புகளைப் படிக்கத் தொடங்கினேன். முதலில் வாசிக்கத்தொடங்கிய தமிழ் இலக்கியப் படைப்புகள் கி.ரா வினுடையவை. பின்னர் மௌனி, லா.ச.ரா, தி.ஜா, அசோகமித்திரன். தற்போது தாங்களுடைய படைப்புகளை படிக்கத் தொடங்கியுள்ளேன். இலக்கியம் தவிர்த்து அதிகம் வாசித்தவை அரசியல் சம்பந்தமான புத்தகங்கள், வரலாறு, தத்துவம், பொருளாதாரம், வாழ்க்கை வரலாறு, தன்வரலாறு போன்றவை.

ரசனை, தேடல் என்பதெல்லாம் ஒருபுறமிருந்தாலும், நான் புத்தகம் வாசிக்க முழுமுதற் காரணம் 'தனிமை'. சமூகத்தால் தள்ளிவைக்கப்பட்டாலும் தனிமைதான், சமூகத்துடன் ஒட்டவிரும்பாவிட்டாலும் தனிமைதான், சமூகத்துக்கு ஒவ்வாதவனாகத் தோன்றினாலும் தனிமைதான்.

என் பெயர் எ**ஸ்**. வயது 21. கீழ்நடுத்தரக் குடும்பப் பின்புலம். இப்போது இன்னொரு பெருநகரில் பட்ட மேற்படிப்பு படித்துக்கொண்டிருக்கிறேன் (அதானால் தான் தங்களின் சமீபத்திய இலக்கிய நிகழ்வுகளான விஷ்ணுபுரம் விழா, புதிய வாசகர் சந்திப்பு எதிலும் பங்கேற்க முடியவில்லை). வெளியில் சொல்ல முடியாத, சொல்ல விரும்பாத, என் பெற்றோர் உற்றார் உறவினர் நண்பர் என எவருக்கும் தெரியாத 'பிரச்சினை' ஒன்று எனக்குண்டு.

இளம்வயதில், அதாவது பதின்மவயதில், ஓடிப்பிடித்து விளையாடும்போது சகதோழர்களின் உடல் என்மீது பட்டால் ஒரு இனம்புரியாத உணர்வு மனதில் எழும். கூச்சம் உண்டாகும். எனக்கு இளையவர்கள் உண்டு. எங்கள் இருவருக்கும் ஒரே படுக்கைதான். அவன் கைகால் என்மீது பட்டால் கூட கூச்சமாக இருந்தது. டிவியில் படம் பார்க்கும்போதுகூட அரைகுறை ஆடையில் வரும் ஆண்களைப் பார்க்கக் குறுகுறுப்பாக இருந்தது. உற்ற

நண்பர்களுடன் பகிர்ந்துகொள்ளக்கூட கூச்ச சுபாவம் அனுமதிக்கவில்லை. தணலிலிட்ட புழுவாய்த் தவித்தேன். உள்நோக்கி ஒடுங்கினேன். சதாசர்வ நேரமும் குழப்பம் உயிரைப்பிய்த்துத் தின்றது. விளையாடச் செல்லவில்லை. எதிலும் பிடிப்பில்லை. இந்த குழப்பத்தை எப்படி அடையாளப்படுத்திகொள்வது என்றுகூடத் தெரியவில்லை. போதாக் குறைக்கு என் நடவடிக்கைகளைப் பார்த்து என் அக்கம் பக்கத்தினர் எனக்கு பல பட்டங்களைக்கொடுத்தனர் – 'பேடி' 'ஒம்போது' போன்றவை அவற்றுள் சில. சொல்ல முடியாத மன அழுத்தம்.

என் உடலில் கொஞ்சம் உப்பு அதிகம். உள்ளங்கையும் உள்ளங்காலும் எப்போதும் வியர்த்துக்கொட்டும். பரீட்சை எழுதிய பேப்பர் கூட, தண்ணீரில் தோய்த்தெடுத்து உலர்த்தியது போலிருக்கும். உப்பு உடம்பு என்பதாலோ என்னவோ, என் வயதொத்த தோழர்களைவிட சீக்கிரமாகவே என் உடலின் அங்கங்களிலும் அந்தரங்க உறுப்புகளிலும் ரோமம் அரும்ப ஆரம்பித்தது. டி.வி யில் பார்த்தால் எந்த கதாநாயகன் மாரிலும் முடியில்லை. என் வயதொத்த நபர் எவரைச் சந்திக்க நேர்ந்தாலும், அவரின் கண்ணைப் பார்த்து பேசாமல், முகத்தில் மீசை இருக்கிறதா, மார்பில் முடி முளைத்திருக்கிறதா என்று தான் கவனித்தேன். ஒரு கட்டத்திற்கெல்லாம் பித்து பிடித்தவனைப் போலானேன். குழப்பத்தில், வீட்டில் அப்பா உபயோகிக்கும் சவரக்கத்தியைக் கொண்டு, கை கால் முகம் மற்றும் பிறப்புறுப்புகளில் அரும்பிய முடிகளை சிரைக்கத்தெரியாமல் சிரைத்து காயம் பண்ணிக்கொண்டேன்..இறுதியில் முடி வளரும் பகுதிகளில் மஞ்சள் பூசிக்கூடக் குளித்துப்பார்த்தேன். ஒரு மாற்றமுமில்லை. சலித்து விட்டுவிட்டேன்.

எங்கள் ஊருக்குப் பக்கத்தில் ஒரு தனியார் கல்லூரி உண்டு. கல்லூரிக்குப் புறத்தே ஒரு சிறிய 'கரடு' உண்டு. ஒருநாள், அக்கல்லூரி மாணவன் ஒருவன், கரட்டில் கொல்லப்பட்டு இறந்து கிடந்தான். அடுத்த நாள் பேப்பரில், இரண்டு மாணவர்கள் கரட்டிற்கு மது அருந்தச் சென்றதாகவும், கொல்லப்பட்ட மாணவன் உடன் சென்ற மாணவனுடன் 'ஒருபால் சேர்க்கை'யில் ஈடுபடத் துணிந்ததாகவும், உடன் சென்றவன் ஆத்திரத்தில் தள்ளிவிட இவன் தலையில் அடிபட்டு இறந்ததாகவும், செய்தி வந்தது. இந்த 'ஒருபால் சேர்க்கை' என்ற சொல் என்னை என்னவோ செய்தது. அதுவரை அப்படியொரு வார்த்தையை நான் கேள்விப்பட்டதில்லை. யாரிடம்

இதைப்பற்றி கேட்பேன். அப்போதெல்லாம் எனக்கு இன்டர்னெட், கம்ப்யூட்டர் குறித்தெல்லாம் ஒன்றும் தெரியாது. அதற்கெல்லாம் வசதியுமில்லை.

ஒருவழியாக, எப்படியோ நகரில் படிக்க இடம் கிடைத்தது. நல்ல கல்லூரி என்பதைவிட, ஊரைவிட்டு 200 கிலோமீட்டர் தள்ளியிருக்கப்போகிறோம் என்ற நினைப்புதான் ஆசுவாசம் தந்தது. புதிய இடம், புதிய தோழர்கள். இந்த நூற்றாண்டில்கூட, ஒருவன் கல்லூரிக்குச் சென்றுதான் இன்டர்னெட் உபயோகிக்க, கம்ப்யூட்டர் இயக்கக் கற்றுக்கொண்டான் என்றால் நம்ப சிரமமாக இருக்குமோ என்னவோ. ஆனால், கல்லூரிக்குச் சென்றுதான் நான் கற்றுக்கொண்டேன். Gay, LGBT போன்ற சொற்களை இன்டர்னெட் மூலம்தான் தெரிந்துகொண்டேன். இவற்றைப்பற்றி இணையத்தில் தேடித்தேடி படித்ததில், என்னுடைய குழப்பங்கள் அனைத்தையும் ஒரே சொல்லில் அடக்கி அர்த்தப்படுத்திக்கொள்ள முடிந்தது. குழப்பங்களுக்கு ஒரு அடையாளம் கிடைத்தது. என்னைப்போல் இன்னும் பலர் உள்ளனர் என்று தெரிந்தது.

ஆனால் இந்த அடையாளம் எனக்கு அமைதியைத்தரவில்லை. சொல்லப்போனால் அவமானமாகத்தான் உணர்ந்தேன்; சுயவெறுப்பு. ஒரினச்சேர்க்கை, ஒருபால்சேர்க்கை, சுயபோகி –போன்ற சொற்களில் எனக்குத் துளியும் உடன்பாடில்லை. ‘ஊனமுற்றோர்’ என்ற வார்த்தைக்கும் ‘மாற்றுத்திறனாளி’ என்ற வார்த்தைக்கும் எவ்வளவு இடைவெளியுண்டு. ‘திருநங்கை’ என்ற வார்த்தைக்கும் ‘ஒம்போது’ என்ற வார்த்தைக்கும் எவ்வளவு இடைவெளியுண்டு.

நகரில் படிப்பு முடித்த கையோடு இப்போதிருக்கும் பெருநகரில் பட்டமேற்படிப்புக்கு சீட் கிடைத்தது; கொஞ்சம்கூட யோசிக்காமல் கிளம்பி வந்துவிட்டேன். நான் நிம்மதியாக இருந்த (இருக்கின்ற) நாட்களென்றால் அவை இங்கே இருந்த (இருக்கின்ற) நாட்கள்தான். இந்நகருக்கு வந்த ஆறு மாதத்தில் தெலுங்கு சரளமாகப் பேசக் கற்றுக்கொண்டேன். இதற்கு மூன்று காரணங்களுண்டு – 1. வந்த புதிதில் நான் மட்டுமே இங்கு தமிழ், 2. இங்கு என்னுடைய நண்பர்களில் பெரும்பாலானோர் தெலுங்கு, 3. அரவிந்தருக்கு ஒரு டஜன் பாஷைகள் தெரியும் என்று வா.ரா பாரதியின் வாழ்க்கைவரலாற்றில் குறிப்பிட்டிருக்கிறார், முன்னாள் பிரதமர் நரசிம்ம

ராவுக்கு பத்து மொழிகளில் புலமை உண்டென்று அவரின் வாழ்க்கைவரலாறான 'Half Lion' புத்தகத்தில் படித்திருக்கிறேன்.

தற்கால வங்க-சினிமாவின் சிறந்த டைரக்டர்களான Rituparno Ghosh, Goutam Ghose, Aparna Sen, Kaushik Ganguly ஆகியோரின் திரைப்படங்களைப் பார்க்கத்தொடங்கினேன். நான் பார்த்த முதல் இரண்டு 'வங்க'ப்படங்கள் ரொம்பவே சுவாரஸ்யமானவை. முதல் படம் 'ஆஷா ஜவோர் மாஜே' (Labour of Love). ஆதித்யா விக்ரம் சென்குப்தா இயக்கி 2014ல் வெளியான அவரின் முதல் திரைப்படம் (இவரின் அடுத்த படங்கள் எதுவும் இதுவரை வெளியிடப்படவில்லை). இதில் சுவாரஸ்யம் என்னவென்றால் – படத்தில் வசனமேயில்லை. இரண்டாவதாக பார்த்த படம் – ரித்துபர்ன கோஷ் இயக்கத்தில் வெளியான 'The Last Lear' திரைப்படம். இப்படத்தில் ஒரேயொரு இடத்தில் மட்டுமே பெங்காளியில் வசனம் வரும், படம் முழுக்கவே ஆங்கிலம். பெங்காளி கற்கவேண்டும் என்று வங்கப்படங்களைப் பார்க்கத் தொடங்கிய என் நிலையைப் பாருங்கள்.

ஆனால் 'The Last Lear' படம் என்னை ரொம்பவே கவர்ந்தது. இப்படத்தின் டைரக்டர் குறித்த விவரங்களை அறிய இன்டர்னெட்டில் தேடியபோதுதான் – 2013ல் மாரடைப்பில் இறந்த ரித்துபர்ன கோஷ், வெளிப்படையாக தான் ஒரு gay என்று அறிவித்துக்கொண்டார், மரணம் வரை LGBT சமூகத்தின் பேராளுமையாகத் திகழ்ந்தார் என்று தெரிந்தது. இந்தத் தகவல்கள் தந்த உந்துதலில் இவரின் பிற படங்களையும் பார்த்தேன். 'Memories in March', 'Chitrangada', 'Arekti Premer Golpo' ஆகிய இவரின் படங்கள் 'கே' கதாபாத்திரங்களை மையமாகக் கொண்ட சிறந்த கலைப்படைப்புகள். இவரின் படைப்புகளில் அசட்டுத்தனம், முதிரா-முற்போக்கு, பிரச்சாரம் போன்ற குப்பைகள் எதுவுமே கிடையாது; முழுமையான அசல் கலை-படைப்புகள். இவரின் படைப்புகள் 12 தேசிய விருது மற்றும் பல சர்வதேச விருதுகளையும் பெற்றுள்ளன.

இவரைப்போல வாழ ஒரு அசாத்தியமான தைரியம் வேண்டும். தன்னுடைய அடையாளத்தை வெளிப்படையாக வெளியில் சொல்லியிருக்கிறார். மக்களும் ஏற்றுக்கொண்டுள்ளனர். என்னுடைய இந்த அடையாளம் குறித்து என் பெற்றோரோ, உற்றார் உறவினரோ, நண்பரோ எவரும் அறிந்திலர். தெரிந்தால் எப்படி ஏற்றுக்கொள்வர் என்றும் தெரியவில்லை. சமயங்களில் என்னுடைய இந்த அடையாளத்தை என்னாலேயே ஏற்றுக்கொள்ள

முடியாதபோது பிறர் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று நான் நினைப்பது அபத்தமாகத்தான் படுகிறது. கண்ணுக்குமுன் நிற்கும் எதிரிகளைக்கூட எதிர்கொள்ளலாம், ஆனால் மனதினுள் சதா சர்வநேரமும் போரிடுவது? இதுவரை எப்படியோ காலம்தள்ளிவிட்டேன், அல்லது காலம் என்னைத் தள்ளிக்கொண்டு வந்துவிட்டது. இதற்குமேல்? எல்லாம் சூன்யமாகத்தான் தெரிகிறது.

நண்பர் ஒருவர் ஒருமுறை சொன்னார் – 'மனுசன் எதுக்கு கோயிலுக்கு போறான்னு தெரியுமா? நம்ம கொறைய கேட்டவுடனே சாமி நிவர்த்திபண்ணிடும் கொற தீந்துடுங்கறதுக்காக இல்ல. நம்மளோட அவஸ்தைகள காது குடுத்து கேக்க ஒருத்தன் இருக்கான்ற நம்பிக்கையிலதான், சொன்னதுக்கப்புறம் கெடக்கிற திருப்திலதான்'. என்னுடைய அவஸ்தைகளை யாரிடம் சொல்ல? எனக்கு தெய்வநம்பிக்கை இல்லை. நான் நாத்திகனும் அல்லன். தங்களை தெய்வத்தின் ஸ்தானத்தில் வைத்து என்னுடைய அவஸ்தைகளைச் சொல்கிறேன் ஜெமோ. அருந்ததி ராய் ஒரு பேட்டியில் 'பாலினம் என்பது ஒரு பெரிய ஒளிக்கற்றை போன்றது. அதில் ஆண் பால், பெண் பால் என்பவை இருவேறு புள்ளிகள். வெறும் இரு புள்ளிகள் ஒரு ஒளிக்கற்றையை உருவாக்குவதில்லை' என்றார். எவ்வளவு ஆழமான வாதம்.

என் வலிகளை முழுமையாக இல்லாவிட்டாலும், முடிந்தவரை இழைத்து எழுதிவிட்டேன். என் அவஸ்தைகளை பால் எல்லைகளுக்கு அப்பாற்பட்டு எழுதும் தங்களைப்போன்ற எழுத்தாளர்களால், இலக்கியவாதிகளால் புரிந்துகொள்ள முடியும் என்று நம்புகிறேன். காலை 10 மணிக்கு எழுதத் தொடங்கினேன். இப்போது மணி மாலை 7. காலையிலிருந்து இன்னும் ஒரு பருக்கை கூட சாப்பிடவில்லை. எழுதுகையில் இடையிடையே மனது சொல்லமுடியா வேதனையில் தத்தளித்தது. என் அவஸ்தைகளுக்கு வரிவடிவம் கொடுக்கமுடியுமா என்று தெரியவில்லை. ஏதோ எழுதிவிட்டேன். இதுநாள்வரை யாருக்கும் காட்டாமல் மனதுக்குள் மூடிவைத்திருந்த பக்கங்களை, தங்களிடம் சொல்ல இன்று திறந்ததில், புலப்படாத பல பக்கங்கள் இன்று விளங்கின. மனது கொஞ்சம் ஆசுவாசம் கொள்கிறது.

ஆனால் எனக்கு தெரியும் இந்த அமைதி நிரந்தரமல்ல. 'எதைத்தின்றால் பித்தம் தெளியும்' என்று பலவற்றையும் முயற்சித்திருக்கிறேன். எதுவும் நிரந்தர அமைதியை எனக்குத் தந்ததில்லை. தங்களிடமிருந்து

எதிர்பார்ப்பதெல்லாம் இதுதான் ஜெமோ – ஏதவது சொல்லுங்கள். வான்முட்டும் அளவுக்குக் கனவுகள் உண்டு எனக்கு. கனகவுளைத்தின்று வாழ்பவன் நான்; வழிகாட்டுங்கள் ஜெமோ. ஒரு சொல்லோ ரெண்டு சொல்லோ எதுவாயினும் சரி, என் மனம் நிரந்தர அமைதிகொண்டிருக்க, என் கனவுகளை நோக்கிப் பயணப்பட ஏதாவது சொல்லுங்கள் ஜெமோ.

நம்பிக்கையுடனும், அன்புடனும்

எஸ்

அன்புள்ள எஸ்,

நீங்கள் இருப்பது ஒரு  ஒரு தனித்துவம் கொண்ட நிலை. ஓரளவு தன்பால் ஈர்ப்பு எல்லா ஆண்களுக்கும் உண்டு. குறிப்பாக பதின்பருவங்களில். இருபத்தைந்து வயது கடக்கும்போது, ஒருவன் தன்னை முழுமையான ஆண் என உணர ஆரம்பிக்கும்போது, அது இல்லாமலாகிவிடும். [ஓரத்தில் கொஞ்சம் இருந்துகொண்டும் இருக்கும். பலருக்கு முதிய அகவையில் மீண்டும் தோன்றும் என்கிறார்கள்].

உங்களிடம் இருக்கும் இந்தக் கூறு எந்த அளவுக்கு இருக்கிறது என நீங்களே கவனித்துக்கொண்டிருங்கள். அது சராசரிக்கும் மேல் என்றால், உங்களால் கட்டுப்படுத்த முடியாதநிலை என்றால், நீங்கள் அதற்கு உங்களை ஒப்புக்கொடுக்கவேண்டும். அதை உங்கள் ஆளுமையாக எடுத்துக்கொள்ளவேண்டும். இயல்பாக, சாதாரணமாக, அத்தனைபேரும் அவரவர் பாலியல் இயல்புகளை எப்படி எடுத்துக்கொள்கிறார்களோ அப்படி. உங்கள் மூளையை நீங்கள் ஒன்றும் செய்யமுடியாது அல்லவா?

நீங்கள் வாசகராகவும் இலக்கிய ஆர்வலராகவும் இருக்கிறீர்கள். உங்கள் மொழிநடை நன்றாக இருக்கிறது. நீங்கள் இயல்பாக சிறந்த எழுத்தாளராக வரக்கூடும். இந்த அலைகளை கடந்துவிட்டால் தமிழில் என்றென்றும் பெயர்விளங்கும் பெரும்படைப்பாளிகளில் ஒருவர் நீங்கள். அதையே உங்கள் முதன்மை அடையாளமாக எண்ணிக்கொள்ளுங்கள். அதை நோக்கி செல்லுங்கள், அதை வளர்த்தெடுங்கள்.

பாலியல் தனித்தன்மை எவருக்கும் பொதுஅடையாளம் அல்ல. அது ஓர் அந்தரங்கம் மட்டுமே. அது எப்படி இருந்தாலும் பொதுவாழ்க்கையில் உங்கள் அடையாளம் இலக்கியம் என்பதாகவே இருக்கக்கூடும் என நினைக்கிறேன். உங்கள் வெற்றி இருப்பது அங்கேதான். இந்த மன அலைச்சல்கள் கொந்தளிப்புகளால் நீங்கள் அந்த இலக்கை இழந்துவிட்டீர்கள் என்றால்தான் உண்மையில் மிகப்பெரிய இழப்பை சந்தித்தவராவீர்கள். அதை தலைக்கொள்ளுங்கள்.

எந்த ஒரு கலையிலும் உண்மையான வெற்றியை அடையவேண்டும் என்றால் அதற்குரிய கடும் உழைப்பு தேவை. ஆயிரம் மணிநேர கடும் உழைப்பு என்பார்கள். இலக்கியத்திற்கு கூடுதலாக அறிவுத்தகுதியும் தேவை என்பதனால் நான் பத்தாயிரம் மணிநேரம் என்பேன். அதை தவறவிட்டுவிடவேண்டாம். உங்கள் அகவையை வைத்துப்பார்த்தால் நீங்கள் வாசித்தவை மிகுதி. எழுதும் மொழி கூரியது. என் 21 அகவையில் நான் இப்படித்தான் இருந்தேன்.

உங்களை இரண்டாக பகுத்துக்கொள்ளுங்கள். ஒன்றை வெளியே காட்டுங்கள். அது நீங்கள் வடித்துக்கொண்ட, நடிக்கும் ஆளுமையாக இருக்கட்டும். அது ஒரு வகை கப்பம் கட்டுதல், புறவுலகினருக்காக. அதை அவர்கள் வைத்துக்கொள்ளட்டும். அது நேர்த்தியாக, பிறர் ஒவ்வாமை கொள்ளாததாக, எந்தக்கூட்டத்திலும் இயல்பாக கரைந்து மறையக்கூடியதாக இருக்கட்டும். அது ஒன்றும் பெரிய விஷயம் அல்ல. எழுத்தாளர்கள் கதைமாந்தரை நடிப்பவர்கள். ஒரு கதைமாந்தரை உங்களுக்காகவும் உருவாக்கிக்கொள்ளுங்கள், அவ்வளவுதான். துரத்தும் நாய்களுக்கு ஒரு துண்டு ஊன் அது.

உள்ளூர உங்களுக்கு நிகழ்வதை கூர்ந்து கவனித்துக்கொண்டிருங்கள். என்ன ஆகிறது? உடலுக்கும் உள்ளத்திற்கும் என்னதான் உறவு? இது ஒருவகையில் ஒரு நல்வாய்ப்பு அல்லவா? பிறருக்கு இல்லாத சில அவதானிப்புகளை அடைவதற்கான வழி அல்லவா? பிறர் எழுதாத ஒன்றை எழுத உங்களால் இயலும் அல்லவா? இளமையில் என் குடும்பத்தில் பெரிய இழப்புகள் உருவானபோது இந்த எண்ணமே என்னை கரையேற்றியது. மெய்யாகவே நான் அடைந்த அகதரிசனங்கள் அதனூடாக உருவானவை. என் ஆளுமை அந்த உளக்கொந்தளிப்பை நான் கூர்ந்து கவனித்ததன் வழியாக அடைந்தது.

உங்கள் எழுத்துக்களில் மட்டுமே நீங்கள் எவர் என பிறர் அறியவேண்டும். தன்னை ஒளித்துக்கொள்ள எழுத்தாளனுக்கு உரிமை உண்டு. அதிலும் பிறர் அறியாதவற்றை அறிபவனுக்கு அது அவசியத்தேவை.

என்றாவது இந்தியாவிலிருந்து ஐரோப்பா அல்லது அமெரிக்காவுக்கு செல்லமுடியும் என்றால் இந்த சமூகத்திற்கான முகமூடி தேவை இல்லை. அங்கே நீங்கள் இயல்பாக இருக்கலாம். அதற்காக முயலுங்கள். இயலவில்லை என்றால் இங்கே இன்னொருவராக நீடியுங்கள்.

ஏன் ஆளுமையை முன்வைத்து போரிடக்கூடாது? அதற்காக நாணவேண்டுமா? அது இழிவானதா? அப்படி அல்ல. உங்கள் இலக்கு ஒரு சமூகசீர்திருத்தவாதியாக ஆவது என்றால் அவ்வாறு செய்யலாம். எதிர்ப்புகளுடன் போரிடலாம். உங்கள் தரப்பை நிலைநாட்டலாம். எழுத்தாளன் என்றால் அது தேவையற்ற உணர்ச்சி வீணடிப்பு. நேர வீணடிப்பு. ஒரு ரிதுபர்ணோ கோஷ் ஆக நீங்கள் உங்களை உருவாக்கிக் கொண்டபின் ஆம் நான் அவ்வாறுதான் என சமூகத்திற்கு முன்னால் வந்து நில்லுங்கள். உங்கள் படைப்பூக்கம் எவ்வகையிலும் அப்போது பாதிக்கப்படாது. ஏனென்றால் உங்கள் வெற்றி அளிக்கும் ஆணவம் அப்போது கவசம்போல நின்று காக்கும்.

உங்களுக்கு சிறந்த உதாரணமாக சுட்டவேண்டிய எழுத்தாளர் ஸக்கி [எச் எச் மன்றோ]. அவரைப்பற்றி எழுதியிருக்கிறேன். அவர் மறைந்து பல ஆண்டுகளுக்குப் பின்னரே அவர் ஒருபாலுறவினர் என்பது தெரியவந்தது. ஏனென்றால் அன்றைய பிரிட்டிஷ் சூழலில் அது இழிவாகவும் சட்டபூர்வமான குற்றமாகவும் கருதப்பட்டது.

உங்களை எப்படி வகுத்துக்கொள்வது, எப்படி முன்வைப்பது என்பதெல்லாம் ஒன்றும் பெரிய பிரச்சினை அல்ல. அது சாதாரணர்களின் சிக்கல். நீங்கள் எழுத்தாளர். ஆகவே உங்களை எப்படி புரிந்துகொள்வது என்பதே உங்கள் சிக்கல். உங்களை ஒரு வகைமாதிரியாகக் கொண்டு இந்த மானுடநிலைமையை புரிந்துகொள்வது, இதனூடாக மானுடத்தை புரிந்துகொள்வதுதான் உங்கள் சவால். அதை எதிர்கொள்ளுங்கள்.

எனக்குப் பிடித்தமான இயக்குநர் ரிதுபர்ணோ கோஷ். இந்தியாவின் வங்கச் சினிமாமேதைகளின் வரிசையில் இறுதியாக வந்த ஆளுமை. அவரைப்பற்றி எழுதியிருக்கிறேன். நீங்கள் ஸகி ஆக இருக்கலாம். ரிதுபர்ணோ கோஷ் ஆக

இருக்கலாம். உங்களில் இருந்து எழத்துடிப்பவர் சற்றே வேறுபட்ட ஒரு பாலியல் ஆளுமை அல்ல என உணர்க! ஒரு கலைஞன், எழுத்தாளன் என கண்டடைக!

எழுத்தாளனுக்கு கலைஞனுக்கு உடல், வாழ்க்கை என்பதெல்லாம் ஒரு பயிற்சிக்கருவியே. அவனுக்கு அவற்றுடன் உணர்வுரீதியான உறவு இருக்கவேண்டும். உரிய விலக்கமும் இருக்கவேண்டும். அப்போதுதான் அவற்றை அவன் அணுகி அறியமுடியும்.

வாழ்த்துக்கள்

## (7) பாலியலை எதுவரை எழுதுவது?

அன்புள்ள ஜெ,

ஒரு சங்கடமான கேள்வி, தவறாக நினைக்கமாட்டீர்கள் என நினைக்கிறேன். உங்கள் படைப்புலகில் நேரடியான காமச்சித்தரிப்புக்கள் இல்லை, அல்லது குறைவாகவும் மென்மையாகவும் உள்ளன. அல்லது நான் சொல்வதை இப்படி மாற்றிச் சொல்கிறேன். நீங்கள் காமத்தை எழுதும்போது அதை உடல்சார்ந்து வர்ணிப்பதில்லை. அந்நிகழ்ச்சிகளை நீடிக்கவிடுவதில்லை.

நான் சரியாகச் சொல்கிறேனா என்று தெரியவில்லை. பல இடங்களில் ஒரு ஜாக்ரதையுடன நின்றுவிடுகிறீர்கள். அல்லது கவித்துவமான மொழியைக்கொண்டு போர்த்திவிடுகிறீர்கள். இதை நாங்கள் நண்பர்கள் பேசிக்கொண்டோம். பாலியலை எழுதுவதை தவறு என நினைக்கிறீர்களா? அல்லது பாலியல் எழுத்து இலக்கியம் அல்ல என்று எண்ணுகிறீர்களா? அல்லது இப்படி கேட்கிறேன், பாலியலை எழுதுபவர் எங்கே நிறுத்திக்கொள்ளவேண்டும் என்று நினைக்கிறீர்கள்

ஆர்.பிரதீப் பாஸ்கரன்

அன்புள்ள பிரதீப்,

இது சங்கடமான கேள்வி எல்லாம் ஒன்றும் இல்லை. நானே ஓரிருமுறை பதில் சொல்லிவிட்ட ஒன்றுதான்.

பாலியலை மட்டும் அல்ல வன்முறையை, உளப்பிறழ்வுகளை, அருவருப்பை, துயரை எதை வேண்டுமென்றாலும் எவ்வளவு வேண்டுமென்றாலும்

எழுத்தாளன் எழுதலாம். எழுத்தின் தரமோ தரமின்மையோ அதனால் முடிவாவதில்லை. எழுத்தாளன் எதை எவ்வளவு எப்படி எழுதவேண்டும் என்பதை அவனுடைய தேடலும், அவனுடைய இலக்கும் மட்டுமே முடிவுசெய்யவேண்டும்.

இலக்கியத்தில் பாலியல் என்று பேசும்போது இரு புலங்களை நாம் கருத்தில்கொள்ளவேண்டும். ஒன்று ஐரோப்பிய சமூகச்சூழல். இன்னொன்று கலையின் கட்டமைப்பு

ஐரோப்பா நெடுநாட்களாக கடுமையான பாலியல் ஒறுப்பை மதநெறியாக கொண்டிருந்த நாடு. ஐரோப்பிய மறுமலர்ச்சி என்பது ஒட்டுமொத்தமாக ஐரோப்பாவின் கிறித்தவ மதநெறிகளுக்கு எதிரான ஒரு சிந்தனைப்போக்குதான்.

கலை இலக்கியம் தத்துவம் மட்டும் அல்ல தொழிற்புரட்சி, நுகர்வுப்பண்பாடு, ஜனநாயகம் எல்லாமே கிறித்தவத்திற்கு எதிரான சிந்தனைகளாக உருவாகி வந்தவை. தனிமனிதன் என்னும் கருதுகோளே கிறித்தவ சிந்தனைக்கு எதிராக எழுந்ததுதான். தனிமனித உரிமை, தனிமனிதனின் தேடல், தனிமனிதனின் அதிகாரம் என்னும் கருத்துக்களே ஜனநாயகம் என்னும் அமைப்பு வரை வந்துசேர்ந்தன.

மேலுலகுக்காக இக உலகை நிராகரிப்பது, அதன்பொருட்டான கடுமையான விரதங்கள் கிறித்தவத்தின் அடிப்படைகள். சதை என்பது சாத்தானின் ஊர்தி என்பது அதன் நம்பிக்கை. இன்றும், இங்கும்கூட தீவிரமான கிறித்தவத்தின் வழி அதுவே.கத்தோலிக்கர்கள் சீர்திருத்தக் கிறித்தவர்கள் இருவருமே பாலியல் ஒறுப்பை ஒர் அடிப்படை சமூக ஒழுங்காக முன்வைத்தனர்

ஆகவே ஐரோப்பிய மறுமலர்ச்சியுடன் இணைந்து எழுந்த இலக்கியங்களில் தனிமனிதனின் பாலியல் விழைவை அங்கீகரிப்பது, அதை முழுக்கமுழுக்க சமூகக் கட்டுப்பாட்டுக்கு விட்டுக்கொடுக்காமலிருப்பது ஆகியவை முதற்பொருளாகப் பேசப்பட்டன.

நவீன ஐரோப்பிய இலக்கியத்தில் பாலியல் மையப்பேசுபொருளானது இவ்வண்ணம்தான். சில எல்லைகளை தொட்டுக்காட்டி இதை விளக்கலாம். அன்னா கரீனினா [தல்ஸ்தோய்] , எம்மா [ஜேன் ஆஸ்டின்] மேடம் பவாரி [ஃப்ளாபர்ட்] போன்ற ஆரம்பகால நாவல்கள் பாலியல்கட்டுப்பாட்டுக்கும் மானுடவிழைவுக்கு இடையிலான மோதலை, மானுட உள்ளத்தின் சுதந்திர

நாட்டத்தை காட்டுபவை. அந்த மோதல் இட்டுச்செல்லும் இறுதி வீழ்ச்சியை முன்வைப்பவை.

அவ்வரிசையை அப்படியே நீட்டிக்கொண்டுவந்தால் லேடி சாட்டர்லிஸ் லவர் [டி.எச். லாரன்ஸ்] ஐ அடைகிறோம். அது அப்பாலியல் விடுதலையை கொண்டாடி, அதை ஒரு மாற்றுவாழ்க்கையாக மட்டுமல்ல மாற்றுமெய்யியலாகவும் முன்வைக்கிறது.

இன்னொரு உதாரணம் என்றால் ஹென்ரிக் இப்சனின் எ டால்ஸ் ஹௌஸ் என்னும் நாடகம் பெண்ணின் விடுதலை குடும்பத்திற்கு வெளியே என்று அறைகூவுகிறது. பியரி லாக்லோஸின் டேஞ்சரஸ் லயசன்ஸ் கட்டற்ற பாலியல்- அதிலிருக்கும் குற்றம் அளிக்கும் கொண்டாட்டத்தை முன்வைக்கிறது

இது ஐரோப்பியப் பார்வையில் நிகழ்ந்த ஒரு கருத்துப்பரிணாமம். ஐரோப்பிய – அமெரிக்க எழுத்தில் பாலியல்சுதந்திரம் முதன்மைப்பேசுபொருள் ஆனது இவ்வண்ணம்தான். அந்த பரிணாமத்தின் கடைசிக்கட்டம் என ஹென்றி மில்லரின் நாவல்களைச் சொல்லலாம்.

ஆனால் அந்தப்புள்ளியிலேயே அந்த கருத்தியல் பரிணாமம் முடிவுற்றுவிட்டது. அதன்பின் எவருக்கும் எதுவும் புதிதாகச் சொல்வதற்கில்லை. அதன்பின் எழுதியவர்கள் ஏற்கனவே எழுதப்பட்டவற்றைத்தான் திரும்பத்திரும்ப எழுதினார்கள். எழுதிக்கொண்டிருக்கிறார்கள்

ஏன்? ஒன்று, ஏற்கனவே நான்கு தலைமுறைகளாக பேசப்பட்ட பாலியல்சுதந்திரம் பெருமளவுக்கு அங்கே சாத்தியமாகிவிட்டிருக்கிறது. ஒரு வாழ்க்கைமுறையாக அது ஆகிவிட்டது. அவ்வாழ்க்கைமுறையில் இருப்பவர்கள் அதை இலக்கியத்தில் வாசிக்க விரும்புகிறார்கள். முன்பு பாலியல் சித்தரிப்பு அளித்த எந்த அதிர்ச்சியும் இன்று உருவாவதில்லை. அது தெரிந்த, பழகிய ஒரு கதையம்சம். ஆகவே எளிதாக வாசிக்க ஏற்றது, அவ்வளவுதான்.

இன்னொன்று, பொதுவாக புனைவுகளை அதிகமாக வாசிப்பவர்கள் இளைஞர்கள். மூளை ஒரு பாலியலுறுப்பாக இருக்கும் வயது அது. அப்பருவத்தில் பாலியல் சித்தரிப்புகளே அவர்களை ஈர்த்து உள்ளே

கொண்டுவருகிறது. ஆகவே அது வாசிப்புவணிகத்தின் முக்கியமான ஒரு கூறாக மாறிவிட்டது

இன்று பாலியலில் எந்த புதிய தத்துவச் சிக்கலும் இல்லை, எந்த ஆழ்ந்த அதிர்வையும் அது அளிப்பதில்லை. நடைமுறையில் இன்னமும்கூட பலர் இலக்கியம் சென்றடைந்த பாலியல்சார்ந்த புரிதல்களைச் சென்றடையாமலிருக்கலாம். ஆனால் இலக்கியம் அதைக் கடந்துவிட்டது. உதாரணமாக இன்னமும்கூட தமிழ்ச்சமூகத்திற்கு விதவைத்திருமணத்திற்கு உளத்தடைகள் உள்ளன. ஆனால் இலக்கியம் அதை குபரா காலத்திலேயே பேசித் தெளிந்து கடந்துவிட்டது.

இன்னொன்றும் உண்டு, சென்ற ஐம்பதாண்டுகளுக்குள் பாலுறவியல் [ ] என்னும் துறை உருவாகி ஓர் மருத்துவமுறையாகவே நிலைகொண்டுவிட்டது. ஹாவ்லக் எல்லிஸ், கின்ஸி போன்ற மேதைகளால் உருவாக்கப்பட்ட அத்துறை அதற்குமுன் இலக்கியங்கள் பேசிய பல தளங்களை வெகுவாக விளக்கி முன்சென்றுவிட்டது

நான் முன்னரும் எழுதியிருக்கிறேன், ஹாவ்லக் எல்லிஸ் போன்ற பாலுறவியலாளர்களை ஓரளவேனும் வாசித்த ஒருவர் இன்றைய புகழ்பெற்ற பாலியலெழுத்தாளர்களின் படைப்புக்களை வாசித்தால் அவை எவ்வளவு மேலோட்டமானவை, எவ்வளவு பிழையான புரிதல்கள் கொண்டவை என உணர்வார். அவற்றுக்கு ஒருவகை பகற்கனவு என்னும் இடம் மட்டுமே உள்ளது

ஆகவே பாலியலை எழுதுவதொன்றும் அதிர்ச்சியோ புரட்சியோ மீறலோ அல்ல. செல்பேசியில் எட்டாம் வகுப்பு மாணவன் பார்க்கும் பாலுறவுக்காட்சிகளுக்கு, பாலுறவுசார்ந்த மீறல்களுக்கு சமானமாக எவரும் எழுதிவிடவுமில்லை. ஒரு மெல்லிய கிளுகிளுப்புக்காக இலக்கியத்திலும் பாலியலையே வாசிக்க விரும்புவது ஒரு தனிமனித விருப்பம். ஆனால் இலக்கியம் என்பது இத்தகைய எளிமையான சொறிதல்சுகம் அல்ல.

இன்று ஒருவர் பாலியலெழுத்தை எழுதினால் உடனே 'சரோஜாதேவிபுத்தகம்' என்ற விமர்சனம் வருகிறது. அது வசை அல்ல, ஒரு பொத்தாம்பொதுவான ஆனால் உண்மையான விமர்சனம்தான். அதைத்தான் நாங்கள் பாலியல்நூல்களி வாசிக்கிறோமே, மலையாகக் குவிந்துகிடக்கிறதே,

மேலதிகமாக நீ என்ன சொல்கிறாய் என்பதுதான் அந்த விமர்சனமாக ஆகிறது.

இந்தியச்சூழலில் இந்த ஐரோப்பியபாணி பாலியல்விடுதலையை பேசுவதன் சிக்கல் என்ன? ஒன்று தமிழ்ச்சூழலிலேயே பொதுவான, அனைவருக்கும் உரிய இறுக்கமான பாலியல்நெறிகள் இல்லை. இங்கே பாலியல் ஒடுக்குமுறை பற்றியெல்லாம் பேசுபவர்கள் பெரும்பாலும் உயர்சாதியினரின் பாலியல்சூழலை மட்டுமே அறிந்திருக்கிறார்கள். பெரும்பாலான அடித்தள – உழைக்கும் மக்கள் தங்களுக்குரிய பாலியல் சுதந்திரத்தை கொண்டிருக்கிறார்கள்.

இரண்டு, இங்கே பாலியல் நெறிகள் என்பவை குடும்பநெறிகள், குலநெறிகள்தானே ஒழிய ஒவ்வொரு தனிமனிதரும் உணரும் அகச்சிக்கல்களாக அவை இல்லை. ஏனென்றால் இங்கே மதம் அப்படி எந்த ஆழ்ந்த கட்டுப்பாட்டையும் விதிக்கவில்லை. இந்துமதம் போன்ற நெகிழ்வான மதம் அப்படி எதையும் விதிக்கவும் முடியாது. ஆகவே குலநெறிகள், குடும்பநெறிகள் மாறும்போது எந்த சிக்கலுமில்லாமல் இன்னொரு ஒழுக்கமுறைக்குள் மக்கள் வந்துசேர்வதைக் காணலாம். சென்ற பத்தாண்டுகளில் விவாகரத்து- மறுமணம் ஆகியவை எத்தனை இயல்பாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன என்பதை பார்த்தால் இது தெரியும்

ஆகவே எங்கோ உள்ள சிக்கலை இங்கே கொண்டுவந்து கடைபரப்பிக் கொண்டிருக்கிறார்கள் என்பதே இதைப்பற்றிய என் புரிதல். சிக்கல்கள் இருப்பது இதை எழுதுபவர்களின் உள்ளத்தில்தான். சமீபத்தில் பேசிக்கொண்டிருக்கையில் ஒரு நண்பர் சொன்னார். ஓர் இளம் எழுத்தாளர், பாலியலை நிறையவே எழுதுபவர், ஆலயச் சிற்பங்களை பார்த்துக்கொண்டிருந்தார். பாலியல்சிற்பங்களைப் பார்க்கையில் எல்லாம் வெடித்துச் சிரித்தார், ஆபாசமான கருத்துக்களைச் சொன்னார். அப்படியென்றால் சிக்கல் இருப்பது எவரிடம்? அவர் எழுதுவது தேடலை அல்ல, அவருடைய நோய்க்கூறை

அமெரிக்காவின் அருங்காட்சியகம் ஒன்றில் பான் என்னும் கிரேக்க தெய்வம் [பாதி ஆட்டு உடல்கொண்டது] தேவதை ஒன்றை வல்லுறவுகொள்ளும் சலவைக்கல் சிலை இருந்தது. ஆனால் தட்டிவைத்து மறைக்கப்பட்ட ஒரு வளைப்புக்குள் அதை மட்டும் தனியாக வைத்திருந்தார்கள். அதைப்பற்றி பேசியபோது நண்பர் சொன்னார். அமெரிக்க அருங்காட்சியகம் ஒன்றின்

முகப்பில் ஒரு இந்திய மோகினி சிலை இருந்தது. அது ஆபாசமாக உள்ளது, தனியாக பிரித்துவைக்கவேண்டும் என்று மக்களிடமிருந்து கோரிக்கை வந்தது என்று

அச்சூழலை நோக்கிப் பேசும் இலக்கியங்களின் இலக்கு வேறு, அவை உருவாக்கும் விளைவும் வேறு. இந்தியச்சூழலில் அவை எந்த ஆழ்ந்த தத்துவ அடித்தளத்தையும் சென்று தொடுவதில்லை. ஒரு மெல்லிய கிளர்ச்சியை அளித்து, வாசிக்க ஆரம்பித்திருக்கும் பையன்களுக்கு கிளுகிளுப்பூட்டி நின்றுவிடுகின்றன.

ஓர் எழுத்தாளனுக்கு மெய்யாகவே மேலதிகமாக கேள்விகள் இருந்து, கண்டடைதல்கள் இருந்தால் அவன் பாலியலை எந்த எல்லைக்கு வேண்டுமென்றாலும் எழுதலாம். கடைசியில் நீ கொண்டுவந்ததுதான் என்ன என்பதுதான் இலக்கியத்தில் என்றுமுள்ள கேள்வி

இரண்டாவது புலம், கலையொருமை. ஓவியம் பார்ப்பவர்களுக்கு தெரியும், சிவப்பு நீலம் கருமை ஆகிய மூன்று வண்ணங்களும் கடுமையானவை. ஓவியர்கள் மிகுந்த கவனத்துடன் மட்டுமே அவற்றை கையாள்வார்கள். அவை திரைச்சீலையிலிருந்து எழுந்து நிற்பவை. பிறவண்ணங்களை மறைப்பவை

காமச்சித்தரிப்பு, அருவருப்புச் சித்தரிப்பு, வன்முறைச் சித்தரிப்பு ஆகியவை கடும்வண்ணங்கள். காமம் உடல்சார்ந்ததாக ஆகும்போது அது மிக எளிதில் அருவருப்பு சார்ந்ததாக மாறக்கூடும். கலைஞர்கள் இம்மூன்றையும் சார்ந்து கட்டுப்பாட்டுடன் செயல்படுவது இதனால்தான்.

இவை வாழ்க்கையின் கூறுகள். இவை இல்லாமல் கலை இல்லை. ஆனால் இவை அந்த ஆசிரியனின் கலைசார்ந்த நோக்கங்களை மறைக்கக் கூடும். ஆகவே அவன் அவற்றின் அளவையும் தீவிரத்தையும் கட்டுப்படுத்துகிறான்

ஓர் எழுத்தாளனின் தேடலும் கண்டடைதலும் காமம் சார்ந்தவை மட்டும் என்றால் அவன் அதை தன் தேடலின் எல்லைவரை கொண்டுசெல்லலாம். அருவருப்பு வன்முறை என்றாலும் அவ்வாறே. உதாரணமாக, ஏழாம்உலகம் அருவருப்பு ஓங்கிய நாவல். ஒருவேளை தமிழிலேயே அவ்வுணர்ச்சி மிகுந்துள்ள ஆக்கம் அதுதான். ஏனென்றால் அந்நாவலின் தேடல் இருப்பதே அந்த தளத்தில்தான்.

அந்த அருவருப்பு விஷ்ணுபுரத்திலும் வெண்முரசிலும் உண்டு. ஆனால் அவற்றின் தேடலும் கண்டடைதலும் வேறு தளத்தில் நிகழ்கின்றன. அவற்றை மறைக்காதபடி, திசைதிருப்பாதபடி, அந்த புனைவுப்பரப்பில் எவ்வளவு தேவையோ அவ்வளவு மட்டுமே அது பயன்படுத்தப்பட்டுள்ளது.

என் எழுத்தைப் படிப்பவர்களுக்குத் தெரியும், என் கேள்விகளும் கண்டடைதல்களும் காமம் சார்ந்தவை அல்ல. என் வாழ்க்கை அவ்வாறு அமைந்தது. இளமையிலேயே சந்திக்கநேர்ந்த சாவுகள் வழியாக மானுட இருப்பின் அடிப்படைகளை நோக்கி சென்றவன். அதற்காக வீடுவிட்டு கிளம்பியவன். நான் எழுதுவது அதையே

அந்த உசாவலை என்னுள் மட்டும் நிகழ்த்திக்கொள்ளாமல் என்னுள் இருந்து வெளியே விரிந்திருக்கும் வரலாற்றை, பண்பாட்டை, மதத்தை, மானுடவாழ்க்கைப்பெருக்கை நோக்கி விரித்துக்கொள்கிறேன். அதுதான் என் இலக்கு. அதில் ஆர்வமில்லாத வாசகர்கள் என் எழுத்துக்களை வாசிக்கக்கூடாது என்பதே என் கோரிக்கை. அது உங்களுக்கானது அல்ல.

என்றும் காமமோ வன்முறையோ என்னை திடுக்கிடச் செய்ததில்லை. இங்கே எந்தத் தமிழ் எழுத்தாளரும் காணாத அளவுக்கு கட்டற்ற காமத்தை, வன்முறையை நான் என் அலைதல்களில் கண்டிருக்கிறேன். அவற்றை இங்கே விரிந்திருக்கும் மானுடவாழ்க்கையின் இயல்பான பக்கங்களாக மட்டுமே நான் பார்க்கிறேன்.

இன்று நினைவுகூர்கிறேன். திருவண்ணாமலையில் ஒருமுறை அறுபதுவயதான ஒரு விபச்சாரிப்பெண்ணை பத்து பையன்கள், அனைவருக்குமே பதினெட்டுக்குள்தான் வயது, மாறிமாறி பாலுறவுகொள்வதை ஒரு பழைய மண்டபத்தின் படிக்கட்டின்மேல் இருந்து பார்த்துக்கொண்டிருந்தேன். நிலவு நேரம். பாலுறவுமீறல்களின் எல்லா நிலைகளும் நிகழ்ந்தன. எனக்கு ஒரு துளிகூட அதிர்ச்சி எழவில்லை. என் வயது இருபத்திரண்டுதான் அப்போது. அதை இப்போது எழுதும்போது மட்டுமே நினைவுகூர்கிறேன். 'ஆமாம், அவ்வளவுதான், அதற்கென்ன?' என்பதே அன்றும் இன்றும் என் எண்ணம்.

ஆனால் அன்றும் இன்றும் சாமியார்கள் என்னை திகைப்படையச் செய்கிறார்கள். ஒருவகை உறவும் இன்றி, அடுத்தவேளை உணவுக்கான எண்ணமே இன்றி வாழ்பவர்கள் அவர்கள். இமைய மலைக்குகைகளில்

தன்னந்தனியாக கடுங்குளிரில் வாழ்பவர்கள், துணியில்லாமல் பல்லாயிரம் மானுடர் நடுவே இயல்பாக உலவும் அகோரிகள், நாளையும் நேற்றுமில்லாதவர்களே என்னை ஈர்க்கிறார்கள்

ஹண்டர் சமவெளியில் இமையமலையை நடந்தே கடக்கும் அமெரிக்க தம்பதிகளைப் பார்த்தேன். தோளில் பையுடன் கிளம்பி இந்தியாவழியாக உலகைச் சுற்றும் ஹிப்பி ஒருவரை பலிதானாவில் கண்டேன். அவர்களே நான் அறியவிரும்புபவர்கள். மானுடனுக்கு இங்குள்ள உறவுகளுடன் உள்ள தொடர்பு என்ன, இந்த ஒட்டுமொத்த மானுடப்பண்பாட்டில் ஒரு தனிமனிதன் பெறுவதும் அளிப்பதும் என்ன, எங்கே அவன் அதன் பகுதியாக இருக்கிறான், எங்கே உதிர்கிறான்?

நான் எழுதுவது, என் வாசகர்களைக் கொண்டுசெல்ல விரும்புவது அந்த வினாக்களை, விடைகளை நோக்கித்தான். அல்லது சிலசமயம் நானே சென்றடையும் விடைகளில்லாத திகைப்பை. அதன்பொருட்டு நான் உருவாக்கும் புனைவுப்பரப்பில் சித்தரிக்கப்படும் வாழ்க்கைக்குள் எந்த அளவுக்கு வேண்டுமோ அந்த அளவுக்கு காமமும் வன்முறையும் அருவருப்பும் இருக்கும் . அவை மையத்தை ஒருபோதும் மறைக்க அனுமதிக்க மாட்டேன்

என் படைப்புகளில் காமம் உண்டு, ஆனால் அதன்பொருட்டு எவரும் என்னை வாசிக்க வருவதில்லை. அப்படி எவராவது வந்தால்கூட என் வாசகர்களே ‘தம்பி உங்க ஏரியா இது இல்லை” என்று சொல்லிவிடுவார்கள். தமிழினி புத்தகக் கடையில் கொற்றவை நாவலை எடுத்து பில்போடக் கொண்டுவந்த ஒருவரிடமிருந்து அதை வாங்கி அப்பால் வைத்துவிட்டு “நீங்க எதுக்கு தம்பி இதெல்லாம் படிக்கிறீங்க? நீங்க வாசிக்கவேண்டிய புக்கு வேறல்ல” என்று சொன்ன வசந்தகுமாரை நான் கண்டிருக்கிறேன்.

நான் காமத்தில் எழுதவிரும்புவது மனித உடல் அதில் என்னவாகிறது என்று அல்ல. பலர் சொல்லிக்கொண்டிருப்பதுபோல மனிதக் காமம் உடல்சார்ண்டதும் அல்ல. மனிதன் அதை கடந்துவந்து பல நூற்றாண்டுகள் ஆகின்றன. மனித உடல் ஒரு குறியீடு, மண்ணிலுள்ள அனைத்துமே மானுட உடலின் குறியீடுகளும்கூட. பலநூற்றாண்டுக்கால கலை, இலக்கியம், தொன்மங்கள் கலந்து மானுட உடல் அவன் உள்ளத்தின் வடிவை அடைந்துவிட்டிருக்கிறது. மானுடக் காமம் என்பது அவன் அகத்தில் நிகழ்வதுதான். உடலில் நிகழ்வது மிகமிகமிகக் குறைவே. உள்ளம் செல்லும்

தொலைவே எழுத்தாளனின் அறைகூவல். உடலை வர்ணித்துக்கொண்டிருப்பவனுக்கு இன்னமும் இலக்கியம் வசப்படவில்லை.

உள்ளத்தின் வீச்சைச் சொல்ல உடலை குறியீடாக ஆக்கலாம். மேலும் மேலும் நுட்பமாக ஆக்கலாம். அவ்வளவுதான் உடலின் எல்லை. அதற்கு அப்பால் எவர் உடலை எழுதினாலும் அது ஒன்றுபோலத்தான் இருக்கும். ஏனென்றால் ஒரு மானுட உடலுக்கும் இன்னொன்றுக்கும் வேறுபாடு ஏதுமில்லை. வேறுபாட்டை உருவாக்குவது உள்ளம். உடலை எழுதுவதன் மிகப்பெரிய சிக்கல் அது உள்ளத்தை எழுதுவதற்கான மிகப்பெரிய தடையாக ஆகிவிடும் என்பதே. இதை ஹென்றிமில்லர் போன்ற பெரிய படைப்பாளிகளிடமே காணமுடியும்.

அதற்கு அப்பாலும் ஒரு புதியமேதை வந்து எல்லைகளை கடந்துசெல்லக்கூடும் என நான் அறிவேன். ஆனால் என் தேடலும் இலக்கும் மானுடன் தான் என உணரும் ஒன்றைச்சார்ந்து மட்டுமே. ஆகவே எனக்கு உடற்சித்தரிப்புகளால் பெரிய பயன் ஏதுமில்லை

## (8) ஆலயங்களில் காமம்

அன்புள்ள அய்யா,

கோவில்களில் உடலுறவுக் காட்சிகளை சித்தரிக்கும் சிலைகள் அமைந்து இருப்பது மிக மிக வியப்பையும், குழப்பத்தையும் தருகிறது. இதன் மூலம் என்ன தெரிவிக்கிறார்கள்? கோவிலுக்கு வரும் பொழுது அந்த மாதிரி சிற்பங்களைப் பார்த்தா மனம் அலைபாயும் இல்லீங்களா? பிறகு எப்பிடி முழு மனமும் தெய்வீகத்துல போகும். ஒரு வேளை காமமும் தெய்வீகம்னு சொல்ல வராங்களா? அப்பிடி இருந்தாலும், ரெண்டு பொண்ணுங்க மூணு ஆண்கள்னு இருக்கற சிற்பங்கள், அது எதை விளக்க வருது? இப்படிப்பட்ட சிற்பங்கள், வடக்கில் மட்டும் இல்லாமல், நம்ம தெற்கிலும் ஒரு மிகப் பெரிய கோவிலில் இருக்குதுங்க அய்யா. சரியான புகைப்பட ஆதாரத்துடன் சீக்கிரம் உங்களுக்கு அனுப்பறேன். ஏதோ ஒரு மிகப் பெரிய மர்மம் இந்தக் காமத்துக்கும் நம்ம தெய்வீக நம்பிக்கைகளுக்கும் இடையில் இருக்கற மாதிரி இருக்கு. நீங்க என்ன நினைக்கிறீங்க?

தாழ்மையுடன்,
சரவணகுமார்

அன்புள்ள சரவணகுமார்,

கோயில்களில் உடலுறவுச்சிலைகள் மட்டும் இல்லை. வாழ்க்கையின் ஒட்டுமொத்தத்தைக் காட்டும் பலவகையான சிலைகள் உள்ளன, அவற்றில் உடலுறவுச்சிலைகளை மட்டும் தவிர்ப்பது இந்து மதத்தின் வழக்கம் அல்ல. வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் கணக்கில் கொண்டு ஒரு முழுமையை உருவகிக்கவே அது முயல்கிறது. ஆகவே துறவுக்கு இருக்கும் அதே முக்கியத்துவம் காமத்துக்கும் இருக்கும்.

இந்தச்சிலைகள் இரு பெரும் மரபுகளைச் சார்ந்தவை. நிலவளம் பெருகுவதற்காகச் செய்யப்படும் வளச்சடங்குகள் [விருஷ்டி அனுஷ்டானங்கள்] தொன்மையான பழங்குடி வாழ்க்கையிலேயே உள்ளவை. அவை போகத்தை செழிப்பின், உயிர் உற்பத்தியின் குறியீடாகக்

காண்கின்றன. இறைவனின் லீலையின் கண்கூடான ஆதாரம் அது எனப் புரிந்து கொள்கின்றன.

ஆகவே சூரியனை வழிபடும் சௌர மதத்தில் அச்சிலைகள் பெருமளவு இருந்தன. பின்னர் சௌரம் வைணவத்தில் கலந்தபோது அச்சிலைகள் விஷ்ணு ஆலயத்திலும் இடம்பெற்றன.

காமத்தை மனிதனின் இயற்கையான ஆற்றலாக எண்ணுபவை தாந்த்ரீக மதங்கள்.அந்த ஆற்றலை அறிவதும் அறிவதன் மூலம் கடந்துசெல்வதுமே மானுட உண்மையின் உச்சநிலையை அறிய உதவும் வழி என அவை நினைத்தன. ஆகவே அவை காமத்தை அறிவின் வழியாகக் கண்டன. அந்தத் தாந்த்ரீக மரபும் பாலியல் சிற்பங்களை உருவாக்கியது. சைவ, சாக்த ஆலயங்களில் அவை காணப்படுகின்றன.

இந்து மதம் நீங்கள் மன ஒருமை கொண்டு கற்போடு வாழ்வதற்காகத் திட்டமிட்டு உருவாக்கப்பட்ட ஒரு நன்னெறித்தொகுப்பு அல்ல. அது வரலாற்றில் பல்வேறு வழிபாட்டுமரபுகளும் சிந்தனைகளும் பின்னிக்கலந்து உருவாகி வந்த ஒரு பெரும் ஞானத்தொகை. அந்த ஞானத்தை முறையாக அறிவதும் அந்த அறிவின் அடிப்படையில் வாழ்க்கையை உருவாக்கிக்கொள்வதுமே ஓர் இந்துவின் கடமை.

எளிமையான கேள்வியை மட்டும் கேட்டுக்கொள்ளுங்கள். அந்தச் சிற்பங்கள் மட்டும் இல்லையேல் உங்களுக்கு மன ஒருமை கைகூடி விடுகிறதா? உங்கள் மனதில் காமம் எந்நேரமும் கொந்தளித்துக்கொண்டுதானே இருக்கிறது? அது நிகழாத, வேறெதிலாவது உங்கள் மனம் நிலைத்திருக்கக்கூடிய, எத்தனை மணிநேரம் வாய்க்கிறது உங்கள் வாழ்க்கையில்?

காமச்சிற்பங்கள் தேவை இல்லை என்றால் கோயிலுக்குப் பெண்கள் வரக்கூடாது என்று சொல்லலாமே.அவர்களைப்பார்த்தால் காமசிந்தனை வரலாமே. ஏன் பெண்கள் வராவிட்டால்கூட மல்லிகை மணம் வந்தாலே போதுமே? இசை, ஓவியம் எதுவாக இருந்தாலும் அதே காம ஈர்ப்பு நிகழலாமே?

மன ஒருமை எதையும் இறுக்கமாக மூடிவைப்பதன் வழியாக நிகழ்வதில்லை. பிரச்சினை மனதில் இருக்கிறது, வெளியே அல்ல. கொஞ்சம் கண்மூடினால்

அந்தச் சிற்பங்களை விட பல்லாயிரம் மடங்கு பிரம்மாண்டமாக உங்கள் மனதில் பிம்பவெளி ஓடுவதை நீங்களே காணலாம்.

எல்லாம் கடவுளின் லீலை என நம்பி ஏறிட்டே பார்க்காமல் நேராகச் சென்று கும்பிட்டு மீள முடிந்தால் அதைச்செய்யுங்கள். அது பக்தியின் வழி. நம்மில் தொண்ணூறு சதவீதம் பேர் அதையே செய்கிறார்கள்.

அது ஏன் என அறிவதே அதைக் கடந்து செல்லும் வழி. அதுவே ஞானத்தின் பாதை. அனைத்தையும் ஒரு மாபெரும் கட்டுமானத்தின் பகுதிகளாகக் காணும்போது உருவாகும் முழுமை நோக்கு மூலமே நாம் விடுபடுகிறோம்.

## (1) ஓரினச்சேர்க்கை

ஜெ

நான் ஓர் ஓரினச் சேர்க்கையாளன். இந்த அஞ்சலை நிறையத் தடவை எழுதி அழித்திருக்கிறேன். இந்த முறை அனுப்பி விட வேண்டும் என்ற உத்தேசத்தில் ஆரம்பிக்கின்றேன்.

எவ்வளவோ முன்னேற்றங்கள் அடைந்தாலும் இன்னும் இந்தியா ஓரினசேர்க்கை என்ற கருத்தில் பின் தங்கியுள்ளதாகவே நினைக்கின்றேன். இந்தியாவில் ஓரினச் சேர்க்கையாளர்கள் (ஒரு சதவிகிதம் ?) முகமூடி அணிந்து கொண்டே வாழ்கின்றார்கள், அல்லது அப்படித்தான் வாழ வேண்டியுள்ளது. நான் ஒன்றும் விதிவிலக்கல்ல. இந்தக் கடிதத்தை ஏன் எழுதுகின்றேன் என்று இன்னும் புலப்பட வில்லை. ஒருவேளை என் மனதின் பாரம் குறைந்தாலும் குறையலாம் (இதன் நிகழ்தகவு குறைவு தான் என்றாலும்).

இப்பொழுது நான் ஓர் ஓரின சேர்க்கையாளன் என்று அறிவித்து விட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். என்ன நேரும்?
க. என் நண்பர்களை இழக்க வேண்டி இருக்கும்.
உ. பெற்றோருக்கு புரிய வைப்பதே பெரும் பாடாக இருக்கும். நிறையக் கண்ணீர் காண நேரிடும். நீங்களே சொல்லுங்கள், எப்படி ஐம்பது வயதை தாண்டிய நபருக்கு, பெற்றோருக்கு, இதை புரிய வைப்பது !
ங. கல்லூரியில், அலுவலகத்தில் எல்லோரும் 'ஒரு மாதிரி' காண்பார்கள். விலகி விடுவார்கள். மதிய உணவையும், இரவு உணவையும் தனியே வெறித்துச் சாப்பிட வேண்டி இருக்கும்.
ச. உறவினர் பக்கம் தலை வைத்து படுக்க முடியாது.
ரு. அல்லது இது மன நோய், உடற் நோய், என்று சரியாக புரிந்து கொள்ளாத நண்பர்களிடமிருந்தோ பெற்றோரிடமிருந்தோ 'சிகிச்சைகள்' பெற வேண்டி இருக்கும்.

இவ்வளவு இடர்ப்பாடுகளைச் சந்திக்க வேண்டியிருப்பதால் எப்படி ஒருவன் பகிரங்கமாக வெளிப் படுத்த முடியும்.

கண்டிப்பாக இன்னும் குறைந்தது பத்து வருடம் ஆகும், ஒருவன் தமிழ்நாட்டில் தான் ஓர் ஓரினன் என்று அறிவிப்பதற்கு.

ஓரினச் சேர்க்கையாளர்களுக்கு மிகவும் இடர்க்கையான ஒன்று, வாழ்க்கையில் திருமண வயதை எட்டுவது தான். பெற்றோர் உறவினர் எல்லோரும் தொடர்ந்து திருமணத்தை வற்புறுத்திக் கொண்டே இருப்பார்கள். மிகவும் சிக்கலான தீர்மானம் எடுக்க வேண்டிய சமயம்.
க. திருமணம் செய்து கொண்டு சகித்துக் கொண்டு வாழ்தல்,
உ. திருமணம் செய்யாமல் தனியே, தன்னந்தனியே என்றிருத்தல்,
ங. திருமணம் செய்யாமல், தனக்குப் பிடித்த நபரோடு வாழ்தல்.

இதில் மூன்றாவதாக இருப்பது சற்றுக் கடினம் தான்.
முதலாவது மனதளவில் மிகக் கடினம். விஷத்தை தொண்டையில் வைத்துக் கொண்டு நீலகண்டனைப் போல் வாழ்வது.
இரண்டாவது, முதலில் சற்று பயமாக, கடினமாக இருந்தாலும், போகப் போகப் பழகி விடும் (என்று நினைக்கின்றேன்). ஆனால் இந்த முடிவில் என்ன நெருடல் என்றால், மற்றவரை, பெற்றோரை நண்பர்களை, வருத்தப் பட அல்லது இழக்கவும் நேரலாம்.

இந்த சூழ்நிலைக்கான காரணம்,
க. சரியாக புரிந்து கொள்ளாமலிருத்தல், மனநோய் என்று மருத்துவரிடம் காட்டல்.
உ. திருமணம் என்ற அமைப்பு தமிழ் நாட்டில் இன்றியமையாது இருத்தல்.
ங. 'குடும்ப மரம்' வளர வேண்டுதல்.
ச. ஓரினன் என்றால் 'தப்பானவன்' என்று முத்திரை குத்தல். ("ஓரின சேர்க்கையாளன் என்மனார் தவறெனக் கருதே" என்று தொல்காப்பியன் சொல்லி விட்டானா என்று தெரியவில்லை)

ஓரின சேர்க்கையில் என்ன தவறு என்று இது வரை எனக்குப் புலப்படவில்லை. தங்களுக்குப் புலப்பட்டால் பகிரவும்.

காலம் தந்து படித்ததற்கு,
நன்றி
விஜய்.

********************

அன்புள்ள ஜெயமோகன் அவர்களுக்கு,

நான் அனுப்பிய சென்ற அஞ்சலைப் படித்தீர்களா என்று தெரியவில்லை. நான் மிகவும் தன்னலமாக ஆதங்கப் பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. I lost the big picture.

இந்தியாவில், தமிழகத்தில் ஓரின சேர்க்கைக்கு இன்றைய நிலைமை என்ன ? ஒரு பெட்டிக்குள் அடைந்து வாழ வேண்டிய வாழ்க்கை. உண்மையை மறைத்து வாழ வேண்டிய வாழ்க்கை. பொய்யான வாழ்க்கை. Living and crying inside a cupboard.

எல்லாரிடமும் ஒரு தப்பான அபிப்ராயம் இருப்பதாகவே கருதுகிறேன். இப்போது கூட section 377 அமுல் பட்ட போது என்ன நேர்ந்தது ? எவ்வளவு சர்ச்சை. இதை ஏதோ கலவிக்காக மட்டும் தான் என்று பார்க்கிறார்கள். காதலாகக் கண்டு கொள்வதே இல்லை. அனுமதித்தால் ஏதோ சாலையெல்லாம் முத்தம் கொடுத்து அசிங்கப் படுத்தி விடுவார்கள் என்பதுபோல் பேசுவதை நீங்கள் எப்படி பார்க்கிறீர்கள் ?

தங்களின் கருத்து என்ன ?

நன்றி,
விஜய்.

அன்புள்ள விஜய்,

1996ல் நித்ய சைதன்ய யதியைப் பார்க்கவந்த ஒருவர் அவரது பேச்சுக்கு முன் கேள்வி வேளையில் கிட்டத்தட்ட இந்த கேள்விகளைக் கேட்டதை நினைவுறுகிறேன். அவரது பதிலை ஒட்டியே நான் இப்போது யோசிக்கிறேன். அன்று அவர் கேட்ட முதன்மையான கேள்வியே ‘ஓரினச்சேர்க்கை’யை இந்துமதம் குற்றமாக கருதுகிறதா, விலக்குகிறதா என்றுதான்.

நித்யா அதற்குச் சொன்னார். இந்து மரபைப்பொறுத்தவரை ஒழுக்கம் என்பது புனிதமானது அல்ல. இறைவனால் உருவாக்கப்பட்டதும் அல்ல. அது கால இடத்துக்குக் கட்டுப்பட்டது. ஆகவே மாறக்கூடியது. அது ஒரு சமூக நெறி மட்டுமே. அது அறம் அல்ல, ஒரு காலஇடத்தில் அறத்தை நடைமுறைப்படுத்துவதற்காக உருவாக்கப்படும் ஒருசில விதிகள் மட்டுமே

ஆகவே, ஒழுக்கத்தைப்பற்றிப் பேசும் நூல்கள் ஸ்மிருதி எனப்பட்டன. அவை நிரந்தரமானவை அல்ல. அழியாத தரிசனங்களையும் தத்துவங்களையும் பற்றி பேசும் நூல்களே ஸ்ருதிகள். ஸ்மிருதிகள் காலம்தோறும் மாறிக்கொண்டிருக்கின்றன. நாம் இப்போது அம்பேத்கார் ஸ்மிருதியை ஏற்றுக்கொண்டிருக்கிறோம்.

ஆக இதை அறப்பிரச்சினையாக எண்ணுவதற்கு எந்த அடிப்படையும் இல்லை. அதாவது இதை தப்பா சரியா என்று எப்போதைக்குமாக வகுத்துக்கொள்ளும் விவாதத்துக்கே இந்திய சூழலில் இடமில்லை. இங்கே இது மதத்தின் பிரச்சினை அல்ல.

அப்படியானால் இது ஒழுக்கப்பிரச்சினை மட்டுமே. அதாவது இன்றைய காலகட்டத்தில், இன்றைய சூழலில் நடைமுறைத்தளத்தில் வைத்து மட்டுமே இதைப்பற்றி நாம் பேசவேண்டும். அதற்கான வரலாற்றுப்பின்னணியுடன் விவாதிக்கவேண்டும்.

ஒழுக்கநெறிகள் இரு அடிப்படைகளில் உருவாக்கப்படுகின்றன.

1. சமூகத்தின் ஒட்டுமொத்தக் கட்டுமானத்தையும் சமூக நிறுவனங்களையும் நிலைநிறுத்துவது
2. தனிநபர் உறவுகளை சீர்ப்படுத்தி மேலான சகவாழ்க்கையை நிலைநிறுத்துவது.

இந்நோக்கில் சிறிதும் பெரிதுமான ஏராளமான ஒழுக்கநெறிகளுக்கு நாம் கட்டுப்பட்டுள்ளோம். ஒரு இடத்தில் வரிசையைப் பேணுவது முதல் முன்பின் தெரியாதவரை முகம் மலர்ச்சியுடன் எதிர்கொள்வது வரை ஒழுக்கநெறிகளே. ஒழுக்க நெறிகள் பொதுவாக மனிதனின் இயல்பான குணங்களான காமம், வன்முறை, சுயநலம்,பேராசை முதலியவற்றை கட்டுப்படுத்தக்கூடியவையாக இருக்கும்

ஆனால் பாலியல் ஒழுக்கநெறிகளைப்பற்றியே நாம் அதிகமும் பேசுகிறோம். அவற்றை பாலியல் கட்டுப்பாடுகளாக மட்டுமே காணக்கூடிய ஒரு போக்கை பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பா உருவாக்கி நமக்கு அளித்தது. நவீன சமூகஉயிரியல், பரிணாம உயிரியலின் கொள்கைகளின்படி அந்த கோட்பாடுகள் தூக்கி வீசபட்டுவிட்டபின்னரும் சிந்தனையில் அவை நீடிக்கின்றன.

பாலியல் ஒழுக்கநெறிகள் நம்முடைய ஆதாரமான உயிர்விசையை கட்டுப்படுத்துகின்றன. கட்டற்று செல்லும் பாலியல் விசையையே இயற்கை நமக்கு அளித்துள்ளது. எல்லா உயிர்களிலும் பாலுறவு என்பது தீவிரமான போட்டி வழியாக தகுதியானவை மட்டும் இனப்பெருக்கம் நிகழ்த்துவதாகவே உள்ளது. அதற்கான வன்முறை அங்கே நிகழ்ந்துகொண்டே உள்ளது. மனித இனம் பாலுறவு மீதான ஒழுக்கக்கட்டுப்பாடுகள் வழியாக பாலுறவில் இருக்கும் வன்முறைப்போட்டியை மெல்லமெல்ல இல்லாமலாக்கி கொண்டது.

அத்துடன் நிரந்தரமான குடும்பம் என்ற அமைப்பை மனித இனம் உருவாக்கிக் கொண்டது. இது குழந்தைகளின் இளமைப்பருவத்தை நீட்டித்தது. அதன் விளைவாக கல்விப்பருவம் நீட்டிக்கப்பட்டது. பண்புக்கூறுகள், சிந்தனைகள் முதலியவை தொகுக்கப்பட்டு அடுத்த தலைமுறைக்கு கையளிக்கப்பட இது வழியமைத்தது.

ஒழுக்கநெறிகள் மனிதனை வெற்றிகரமாக சமூகங்களாக தொகுத்தன. அதன் மூலமே மனிதகுலத்தின் பெரும் பண்பாட்டுப்பாய்ச்சல்கள் சாத்தியமாயின. மானுட இனத்தின் பரிணாம வரலாற்றில் ஒழுக்கம் என்பது அது கண்டுபிடித்த ஒரு முக்கியமான ஒரு கருவி. அதன் வளர்ச்சிக்கும் வெற்றிக்கும் ஒழுக்கம் பெருமளவுக்கு பங்களிப்பாற்றி இருக்கிறது.

அகவே ஒழுக்க நெறிகளை எதிர்மறையானவையாக பார்க்காமல் பயனுள்ளவையாக, தவிர்க்கமுடியாதவையாக பார்க்கலாம் என்றுதான் நான் நினைக்கிறேன்.

ஆனால் ஒழுக்க நெறிகள் ஒவ்வொரு காலகட்டத்திற்கும் ஒவ்வொன்றாக உள்ளன. அவை உருவாவதற்கான சமூகப்பின்னணியும் வாழ்க்கைச்சூழலும் பல்வேறுபட்டவை. அவை சமூகத்தில் ஆழமான நம்பிக்கைகளாக வேரூன்றச் செய்யப்படுகின்றன. அந்த சமூகப்பின்னணியும் சூழலும் மாறிய பின்னரும் அவை அவ்வளவு எளிதாக மாறுவதில்லை. இதுவே ஒழுக்கம் சார்ந்த விஷயங்களில் உள்ள மிகப்பெரிய பிரச்சினை

ஒரு நல்ல சமூகத்தில் ஒழுக்கம் சார்ந்த நம்பிக்கைகளை மாற்றுவதற்காக அந்தச் சமூகத்தின் தீவிரமான ஒரு பகுதியினர் எப்போதும் முயன்றபடியே இருப்பார்கள் என நான் நினைக்கிறேன். ஏனென்றால் எப்போதுமே

எச்சமூகத்திலும் அதன் ஒழுக்கபிரக்ஞ்ஞையில் ஒரு பகுதி காலாவதியான விஷயங்களால் ஆனதாகவே இருக்கும்.

நிலப்பிரபுத்துவ காலகட்டத்தில் பழங்குடி மனநிலை கொஞ்சம் நீடிக்கும். முதலாளித்துவ காலகட்டத்தில் நிலப்பிரபுத்துவ மனநிலை நீடிக்கும். அது இயல்பு. அந்த பழைய அம்சங்களை களையவும் புதிய சூழலுக்கேற்ப புதிய ஒழுக்கங்களை உருவாக்கவும் ஒரு சாரார் போராடத்தான் வேண்டும்.

இந்த பின்புலத்தில் உங்கள் கேள்விக்கு வருகிறேன்

நம்முடைய சமூகம் இன்று நடைமுறையில் முதலாளித்துவத்திற்கும் நிலப்பிரபுத்துவத்திற்கும் நடுவே உள்ளது. நம்முடைய மனமோ பெரும்பாலும் நிலப்பிரபுத்துவ ஒழுக்கங்களால் ஆனதாக உள்ளது.

நிலப்பிரபுத்துவம்முதலாளித்துவம் இரண்டுக்கும் நடுவே அடிப்படையான ஒரு வேறுபாடு உள்ளது. நிலப்பிரபுத்துவம் மனிதர்களை அவர்களின் பொதுத்தன்மைகளின் அடிப்படையில் தொகுக்க முயன்றது. பொதுவான அளவுகோல்களே அனைவருக்கும் போடப்பட்டன. பொதுமைப்படுத்துவதன் மூலம் உருவாகும் ஒழுக்கவிதிகளும் நடைமுறைகளுமே அனைவருக்கும் அளிக்கப்பட்டன. மனிதனை அது சமூகத்தின் ஒரு அலகு மட்டுமாக பார்க்கிறது. தனித்தன்மைகள், தனிவிருப்புகள் பொருட்படுத்தப்படுவதில்லை.

ஊரோடு ஒத்துவாழ் என்ற சொல்லே அதன் நெறிகளின் அடிப்படை. நிலப்பிரபுத்துவத்தின் எல்லா நெறிகளுமே மிகப்பொதுவாக வகுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு ஆண் இப்படி இருக்கவேண்டும், ஒரு பெண் இப்படி இருக்கவேண்டும், தந்தை இப்படி இருக்கவேண்டும், ஆசிரியர் இப்படி இருக்கவேண்டும் என அது முற்றாக வகுத்துரைக்கிறது. அதில் அடங்காத தனித்தன்மைகளை எல்லாம் அது மீறல்களாகவே பார்க்கிறது. அங்கே தனிமனிதன் இல்லை, சமூகப்பாத்திரங்களே உள்ளன.

இன்று தமிழகத்தில் வீட்டுமனை விற்பனையாளர்களிடம் கேட்டால் ஒன்றைச் சொல்வார்கள். கிராமங்களுக்குள் உள்ள நிலங்களுக்கு விலை இல்லை. கிராமத்துக்கு வெளியே பொட்டல்களில் உருவாக்கப்படும் மனைகளுக்கே மதிப்பு. ஏன்? கிராமங்களுக்குள் வாழ்ந்தோமென்றால் கிராமக்கட்டுப்பாடுகளுக்கு அடங்கிச்செல்லவேண்டியிருக்கும். அங்கே தனிமனித ரசனைக்கும் சுதந்திரத்துக்கும் இடமே இல்லை. அதாவது அங்கே

நிலப்பிரபுத்துவம் உள்ளது. வெளியே உள்ள 'நகர்'களில் முதலாளித்துவம் உருவாக்கிக் கொள்ளப்படுகிறது.

முதலாளித்துவம் அந்த பொதுமைப்படுத்தலுக்குள் உள்ள தனிக்கூறுகளை கணக்கில் கொள்கிறது. அதில் தனிமனிதன் இருக்கிறான். அவனுடைய தனித்தன்மை அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தனித்தன்மைக்குரிய சுதந்திரத்தை அவன் பொதுவான சமூக அமைப்புக்கு ஊறு விளைவிக்காமல் அடையலாம் என்று அது அனுமதிக்கிறது.

இந்த எண்ணங்களும் , இந்த உரிமைகளும் தமிழ்நாட்டைப்பொறுத்தவரை வெறும் ஐம்பது வருடங்களில் அடையப்பெற்றவை என்பதை நாம் இப்போது உணர்வதில்லை. புதுமைப்பித்தன் முதல் ஜெயகாந்தன் வரையிலான எழுத்தாளர்கள் அவர்களின் எழுத்துக்களில் இந்த உரிமைகளுக்காக வேகத்துடன் பேசியிருக்கிறார்கள். கல்யாணி என்ற புதுமைப்பித்தன் கதையை இன்று வாசித்தால் அந்த சிக்கலே ஆச்சரியமூட்டும். ஒரு சுதந்திர வாழ்க்கையை ஏன் கல்யாணி உதறுகிறள்? அவள் ஒரு தனி ஆளுமை, அவளுக்கென ஒரு மனமும் வாழ்க்கையும் இருக்கலாமென அவளுக்கே தெரியாது. சமூகம் பற்றித்தான் அவளுக்கு கவலை.

ஜெயகாந்தனின் முழுப் போராட்டமும் தனிமனித ஆளுமைக்காகவே என்றால் அது மிகையல்ல. 'அந்தரங்கம் புனிதமானது' 'சமூகம் என்பது நாலுபேர்' போன்ற அவரது தலைப்புகள் வழியாக சென்றாலே போதும், ஒரு சித்திரம் கிடைத்துவிடும்

முதலில் சமூகத்தில் உள்ள அத்தனைபேருக்கும் அவர்களின் தனித்தன்மையை அவர்களே உணரச்செய்வதாக, அவர்களை தனிமனிதர்களாக அறியச்செய்வதாக இச்சிந்தனைகள் செயல்பட்டன. அதன் பின்னரே அச்சமூகத்தின் சற்றே வித்தியாசமான உறுப்பினர்களின் உரிமைகள் பற்றிய பிரக்ஞை உருவாகியது

நம் சமூகத்தில் ஐம்பதுகள் வரைக்கும்கூட பெண்களுக்கு சம உரிமை உண்டு என்பதை வலியுறுத்திப் பேசிக்கொண்டிருந்தோம். மாற்றுத்திறனாளிகளுக்கான உரிமைகளைப்பற்றிய பிரக்ஞை வந்து இருபது வருடங்கள்கூட ஆகவில்லை. திருநங்கைகளுக்கான உரிமைகள் பற்றிய பேச்சுக்கள் உருவாகி பத்து வருடங்கள்கூட ஆகவில்லை.

இன்னமும் கூட இந்த உரிமைப்பிரக்ஞைகள் நம் கிராமங்களுக்குச் சென்று சேரவில்லை. ஊடகங்கள் மூலம், தொடர்ச்சியான பண்பாட்டுச் செயல்பாடுகள் மூலம் மெல்லமெல்லத்தான் அது சென்று சேரும். சமூகமாற்றங்கள் எப்போதும் பலபடிகளாக மெதுவாகவே நிகழமுடியும். ஏனென்றால் அவை பல லட்சம் மனிதர்களின் சிந்தனைகள், உணர்ச்சிகள், பழக்கவழக்கங்களுடன் தொடர்புள்ளவை.

இந்த உரிமைக்குரல்களை சம்பந்தப்பட்டவர்கள் எழுப்புவதற்கு நெடுநாட்களுக்கு முன்னரே இலக்கியத்தில் அவை அழுத்தமாக பதிவாகியிருப்பதை காணலாம். உதாரணமாக தமிழிலக்கியத்தில் திருநங்கைகளின் உணர்ச்சிகளை உண்மையின் தீவிரத்துடன் பதிவுசெய்து அதை ஒரு மானுடப்பிரச்சினையாக காணச்செய்தவர் கி.ராஜநாராயணன்.[கோமதி]

இந்த வகையில்தான் ஓரினப்புனர்ச்சியாளர்களின் உரிமைகளைப்பற்றிய பிரக்ஞையும் வருகிறது. அவர்கள் சமூகத்தில் தனித்தன்மை கொண்ட பிரிவினர். அவர்களின் உரிமைகள் காக்கப்படவேண்டும் என்ற கருத்து உருவாகி பண்பாட்டுத்தளங்களில் வலுப்பெற்று மக்கள்மனத்தில் நிலைபெற்று சமூகமாற்றமாக ஆக கொஞ்ச காலம் பிடிக்கும். இங்கே இன்னும் அது ஆரம்பிக்கப்படவே இல்லை.

இங்கே அதற்குச் சாதகமாக உள்ள அம்சம் என்னவென்றால் சாராம்சத்தில் இந்து மதம் அதற்கு எதிரானது அல்ல என்பதே. அதன் பல்வேறு பிரிவினர் தனிப்பட்ட எதிர்ப்புகளை தெரிவிக்கலாம். ஆனால் அந்த எதிர்ப்புகளை வெல்வதற்கான எல்லா ஆதாரங்களையும் இந்துமதமே அளிக்கிறது. நிறுவன மதத்தின் எதிர்ப்பு இவ்விஷயத்தில் நிகழாது. திருநங்கைகளின் விஷயத்தில் இன்று உலகிலுள்ள பல நாடுகளில் நிறுவன மதங்கள் அளிக்கும் எதிர்ப்பை பார்க்கையில் இந்தியாவில் அந்த மாற்றம் சுமுகமாக நிகழ்வதை எவரும் காணமுடியும்.

ஒருபால்புணர்ச்சியாளர்களைப்பற்றிய உங்கள் வருத்தங்களைப்பற்றி என் கருத்தைச் சொல்கிறேன்….

பழங்குடிச்சமூகங்களிலும் அவற்றில் இருந்து நிலப்பிரபுத்துவச் சமூகங்களிலும் வேரூன்றிய ஒரு கருத்துநிலை ஆண்மை என்பது. வீரம் என்பதுடன் அது நேரடியாக தொடர்பு படுத்தப்பட்டுள்ளது. நம் பண்டைய

இலக்கியங்களில் ஆண்மை என்ற சொல் எப்படியெல்லாம் கையாளப்பட்டுள்ளது என்பதைக் கண்டால் அது விளங்கும். அச்சொல்லுக்கு , கௌரவம், நிமிர்வு என பல அர்த்தங்கள்.

போராலேயே நிறுவபப்ட்டு வளர்ந்த அச்சமூகங்கள் உடல்சார்ந்த, வன்முறைசார்ந்த வீரத்தை மைய விழுமியமாக போற்றியதில் ஆச்சரியமில்லை. அப்படி ஒருவிழுமியம் இருந்தால்தான் வீரர்கள் உருவாவார்கள். சமூகத்துக்காக போர்முனைகளில் சாவார்கள். இன்றும் நம் மொழியிலும் ஆழ்மனதிலும் அவ்விழுமியம் இருக்கத்தான் செய்கிறது. இன்று வீரர்கள் விளையாடுகிறர்கள், சினிமாவில் நடிக்கிறார்கள்.

ஆண்மைக்கு எதிரானவை, ஒவ்வாதவை என்பதனாலேயே ஓரினச்சேர்க்கை, மூன்றாம்பாலினம் போன்றவற்றின் மேல் சமூகம் இழிவான நோக்கை உருவாக்கிக் கொண்டது. போர்ச்சமூகங்களில் அந்த துருவப்படுத்தல் இன்னும் தீவிரமாக இருக்கும். பேடி, பொண்ணன் போன்ற சொற்கள் வசைச்சொற்களாகவே சமூக மனதில் ஊறின.

அந்த வெறுப்பையும் நிராகரிப்பையும் தப்புசரி என்று பார்ப்பதை விட நேற்றைய போர்ச்சமூகத்திற்கு தேவை என்பதனால் அது உருவாக்கிக்கொண்ட ஒரு விழுமியம் என்று பார்ப்பதே சரியானது. அன்று உருவாக்கிக்கொண்ட எத்தனையோ கருவிகள் இன்று அருங்காட்சியகத்தில் உள்ளன. கருத்துக்களும் அப்படித்தான். அவை அப்படிப்பட்ட கருத்துக்கள்.

மூன்றாம்பாலினத்தை பொறுத்தவரை அது சம்பந்தப்பட்டவரின் பிழை அல்ல என்ற எண்ணம் சமூகத்தில் உள்ளது. ஒருபால்புணர்ச்சிக்கு அந்தச் சலுகை இல்லை. அது அந்தத் தனிநபரின் கோணலானரசனை என்ற எண்ணம் இருந்தது, இருக்கிறது. அது இயற்கைக்கு மாறானது என்று நம்பப்படுகிறது.

ஒருபால் புணர்ச்சிக்கான உந்துதல் என்பது இயற்கையானது, எல்லா உயிர்களிலும் காணப்படுவது என்று அறிவியல் பூர்வமாக நிறுவப்பட்டு முப்பது வருடங்கள்கூட ஆகவில்லை. ஐரோப்பாவில் அதற்கு சட்டபூர்வ அனுமதி அளிக்கப்பட்டபோதுகூட அது தனிமனித உரிமை என்றுதான் பார்க்கப்பட்டதே ஒழிய அதுவும் ஒருவகையில் இயற்கையானது என்பதனால் அல்ல. எழுபதுகளில்தான் பல்வேறு விலங்கியல்,

சமூகஉயிரியல் ஆய்வுகள்மூலம் அதுவும் இயற்கையானதே என நிறுவப்பட்டது.

எண்பதுகளின் இறுதியில்தான் இதுசார்ந்த சில பேச்சுக்கள் இந்தியச்சூழலில் உருவாயின. எண்பத்தெட்டில் ஒரினப்புணர்ச்சி சட்டபூர்வமான, தனிமனித உரிமையாக ஆக்கப்படவேண்டும் என்று கோரி மனித உரிமைக்கழகத்துக்கு அளிக்கப்பட்ட ஒரு மாபெரும் மனுவில் நானும் கையெழுத்திட்டிருந்தேன். இந்த விஷயம் சார்ந்து பொது ஊடகங்களில் இன்னும் விரிவான விவாதங்கள் ஆரம்பிக்கப்படவில்லை.

பல்வேறு மதங்களின் கலவையாக உள்ள இந்தியா இந்த விஷயத்தில் சட்டபூர்வமாக ஒரு நிலைப்பாடு எடுக்கக் கொஞ்சம் தாமதிக்கும் என்றே நினைக்கிறேன். இஸ்லாமிய சமூகம் மன்னிக்கமுடியாத குற்றமாகக் கருதும் ஒன்றை இந்திய அரசு எளிதில் சட்டமாக ஆக்கிவிடமுடியாது. ஆனாலும் அது நிகழும் என்பதில் ஐயமில்லை.

ஒரினப்புணர்ச்சியாளர்களின் சட்டபூர்வமான உரிமைகள் பேணப்படுவதும் அவர்கள் சமூகத்தின் இயல்பான உறுப்பினர்களாக ஆவதும் படிப்படியாக சாத்தியமாகக்கூடிய ஒன்றே. சிறிதுகாலம் ஆகலாம், ஆனால் அது நிகழ்ந்தே தீரும். சுருக்கமாகச் சொன்னால் சமூகப்பொதுவான அங்கீகாரத்துக்காக சட்டபூர்வமான முடிவு தாமதமாகிறது. இது தாமதமே ஒழிய மறுப்பு அல்ல.

*

கடைசியாக உங்கள் தனிப்பட்ட பிரச்சினை பற்றி..

ஒரு அற்பமான விஷயத்தைச் சொல்கிறேனே. நான் இப்போது முழுநேர எழுத்தாளன். நாள்முழுக்க வீட்டில் இருக்கிறேன். என் மனைவி வேலைக்குச் செல்கிறாள். இது என் சூழலில் உருவாக்கும் குழப்பத்தையும் சங்கடத்தையும் கிண்டலையும் சொன்னால் நீங்களே ஆச்சரியப்படுவீர்கள்.

நான் வீட்டில் எரிவாயு வாங்கி வைக்கிறேன். பால் வாங்கி வைக்கிறேன். வீட்டை கூட்டுகிறேன். துணி துவைக்கிறேன். என் மகளுக்கு ஏதாவது சமைக்கிறேன். இவை பெண்களுக்குரிய செயல்கள். ஆகவே என்னை ஆணுக்கு உகக்காத ஒன்றைச் செய்பவனாக நினைக்கிறார்கள். கிண்டலுக்கும் கேலிக்கும் உரிய ஒன்றாக நினைக்கிறார்கள்.

தெருவில் துணி இஸ்திரி போடுபவர், நாளிதழ் போடுபவர் முதல் பக்கத்து வீட்டுக்காரர் வரை கிண்டலாக ஏதேனும் சொல்கிறார்கள். நான் என் மனைவியை விட ஐந்து மடங்கு சம்பாதிப்பவன் என்று தெரிந்தவர்களுக்கும்கூட இது சங்கடமாக இருக்கிறது. இன்றும்கூட துணி துவைக்கும், வீட்டில் இருக்கும் கணவனைப்பறிய நகைச்சுவைத்துணுக்குகள் ஆனந்தவிகடனில் வந்துகொண்டுதான் உள்ளன.

என் மனைவிக்கே சங்கடம். நான் ஒருமாதமாக வீட்டில் இருந்தால் எங்காவது கிளம்பிப்போ, வேலைக்கு போயிருக்கிறார் என்று பக்கத்துவீட்டில் சொல்கிறேன் என்கிறாள்.

இந்த விஷயத்திலேயே இப்படி என்றால் உங்கள் விஷயத்தில் எவ்வளவு பிரச்சினைகள் இருக்கும். அப்பிரச்சினைகளை நீங்கள் எதிர்கொள்ள இரு வழிகள் உள்ளன. ஒன்று அதை வெளிப்படையாக வைப்பது. அந்த உரிமைகளுக்காக போராடுவது. உங்கள் வாழ்க்கையை உங்களைப்போன்றவர்களின் உரிமைக்கான போராட்டமாக ஆக்கிக் கொள்வது. அப்படி ஆக்கிக்கொள்பவர்களே சமூகத்தை முன்னெடுக்கிறார்கள்.

ஆனால் அந்த வாழ்க்கையில் தியாகம் மட்டுமே உண்டு. அபாரமான மனபலம் இல்லாமல் அதைத் தேர்ந்தெடுக்க முடியாது. இழப்புகளுக்காகத் தயாராக இல்லாமல் அவ்வழி செல்லமுடியாது

எஞ்சும் ஒரேவழி இந்தச்சூழல் உங்களுக்காக மாறும் வரை உங்கள் தனி வாழ்க்கையை ரகசியமாக வைத்திருப்பதே. எப்போதும் நம் சமூகத்தில் உங்களைப்போன்றவர்கள் அப்படித்தான் இருந்திருக்கிறார்கள். வேறு வழியே இல்லை

நம் சமூகத்தில் ஏதேனும் வகையில் தனித்தன்மை உள்ள மனிதர்கள் தங்களைப்போன்றவர்களுடன் இணைந்து ஒரு உபசமூகமாக ஆகித் தங்களுக்குள் வாழ ஆரம்பிக்கிறார்கள். அதையே உங்களுக்கும் சொல்வேன். அதை ஒரு இழிநிலையாக, தண்டனையாக அல்லாமல் ஒரு வாய்ப்பாக, தவிர்க்கமுடியாத ஒரு வழியாக நினைத்தால் போதுமானது.

## (2) ஓரினச்சேர்க்கை-கடிதங்கள்

மிக விரிவான மறுமொழிக்கு நன்றி.
தேர்வு இருந்ததால் அஞ்சல் பார்க்க தாமதமாகி விட்டது.

***மூன்றாம்பாலினத்தை பொறுத்தவரை அது சம்பந்தப்பட்டவரின் பிழை அல்ல என்ற எண்ணம் சமூகத்தில் உள்ளது. ஒருபால்புணர்ச்சிக்கு அந்தச் சலுகை இல்லை. அது அந்தத் தனிநபரின் கோணலானரசனை என்ற எண்ணம் இருந்தது, இருக்கிறது. அது இயற்கைக்கு மாறானது என்று நம்பப்படுகிறது.***

இது முற்றிலும் உண்மை. இன்னும் ஓரினசேர்க்கையை இயற்கை என்று நம்ப மறுக்கிறார்கள். ஓரினசேர்க்கை சட்டமாக அங்கீகரிக்கப் பட்டால், ஏதோ சாலை நெடுகிலும் முத்தம் கொடுத்து அசிங்கப் படுத்தி விடுவார்கள் என்பது போல் நினைக்கப் படுகிறது. மூடி மூடி வைத்திருந்தால் தான் ஆபத்துகள் அதிகம்.

இன்னொன்று, குடும்ப வரம்புறுகு சிதைந்து விடும் என்ற தவறான நம்பிக்கை (மற்றொரு மூட நம்பிக்கை!) இருக்கிறது. இது மிகவும் அபத்தம். மொத்த மக்கள்தொகையில் மிஞ்சிப்போனால் ஒரு சதவிகிதம்(அதிகபட்சமாக) தான் ஓரினசேர்க்கையாளர்கள் இருப்பார்கள் என்று நினைக்கின்றேன். அதனால் குடும்ப வரம்புறுகிற்கு எந்தச் சிதைவும் ஏற்பட்டு விடாது என்றே கருதுகிறேன்.

தமிழ் எழுத்துலகிலும் எனக்குத் தெரிந்து இந்தப் பிரச்சினையை(பிரச்சனை/பிரச்சினை?) யாரும் விவாதித்ததாகத் தெரியவில்லை. உயிர்மையில் ஓரினசேர்க்கை-தளத்தில் ஒரு சிறுகதை படித்திருக்கிறேன். வெளிநாட்டுப் பெண் ஒருத்தி கிராமத்தில் தங்கியிருப்பாள். எல்லாரும் அவளைப் பார்த்து பிரமித்து இருப்பார்கள். கடைசியில் அவள் தன் partner (துணை ?) என மற்றொரு பெண்ணை(வெளிநாடு) அழைத்து வருவாள். கிராமத்தில் உள்ளவர்கள் ஆச்சரியத்தில் மூழ்கி விடுவார்கள். இது சிறுகதையின் திருப்பமாகக் கையாளப் பட்டிருக்கும். தமிழ் எழுத்தில், வேறு விவாதங்கள்

நடந்திருக்கலாம்; என் வாசிப்புலகம் மிகக் குறுகிய வட்டம் என்றே கருதுகிறேன்.

தமிழ் சினிமாவைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். உலகம் பேரன் காலத்தில் இருக்கும் பொழுது தான், தமிழ் திரையுலகம் தாத்தா சினிமாவை எடுக்கும்.

நம் சமூகத்தில் ஏதேனும் வகையில் தனித்தன்மை உள்ள மனிதர்கள் தங்களைப்போன்றவர்களுடன் இணைந்து ஒரு உபசமூகமாக ஆகி தங்களுக்குள் வாழ ஆரம்பிக்கிறார்கள். அதையே உங்களுக்கும் சொல்வேன். அதை ஒரு இழிநிலையாக, தண்டனையாக அல்லாமல் ஒரு வாய்ப்பாக, தவிர்க்கமுடியாத ஒரு வழியாக நினைத்தால் போதுமானது

இதனை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ஓர் இழிநிலையாகவே கருத முடிகிறது. யாருக்கும் தெரியாமல் ஓர் உபசமூகமாக வாழ்வது, ஏதோ பரத்தை போன்ற வாழ்வே எனக் கருதுகிறேன். பரத்தை என்பது இந்தக் காலத்தில் தான் இழிவு; சங்கக் காலத்தில் பரத்தை ஒரு சமூக அம்சம்; இது காலத்தின் மாற்றம் என்று தாங்கள் கூறலாம். இருந்தாலும் ஒரு மறைவு-வாழ்வுக்கு என் மனம் இடம் தரவில்லை.

வேறு யாரிடமும் இதைப் பற்றி பேச முடியாக் காரணத்தால், தங்களிடம் பகிர்வது மனதை இளகச் செய்கிறது. தங்களிடம் தொடர்ந்து உரையாட விருப்பம்,

நன்றி,
விஜய்.

பி.கு. முற்றிலும், வேறு தளத்தில். ஆங்கிலத்தில் a-an போல, தமிழில் ஒரு-ஓர் இருக்கின்றது. ஆனால் நான் படித்தப் புத்தகங்கள், வலைப்பூக்கள் (தங்களது உட்பட), பெரும்பாலான இடங்களில் 'ஒரு' தான் பயன்படுத்தப் படுகிறது. இதை வேண்டுமென்றே செய்த தவறு என்று சொல்ல மாட்டேன். மாறாக 'ஓர்' பயன்பாடு அழிந்துக் கொண்டிருக்கிறது என்றே கருதுகிறேன். உரையாடிய நண்பர்களிடம் யாரிடமும் (நான் உட்பட), பேச்சு வழக்கில் 'ஓர்' உபயோகப்பட்டுக் கேட்டதில்லை. இது ஒரு தவறாகவே கருதப் படுவதில்லை. இந்த வலைப்பூவில் (http://urapvr.tumblr.com/post/4023427252/tamil-article) உலாவினப் பின்பு தான், ஒரு-ஓர் பயன்பாடு எனக்குத் தெரிய வந்தது. இந்த மாற்றத்தைப் பற்றி தங்களின் கருத்து என்ன ?

அன்புள்ள விஜய்

நான் சொல்வது ஒரு நிரந்தர வழியல்ல. ஒரு தற்காலிக தீர்வு. இன்னொரு வழியையும் சொல்லியிருக்கிறேன். அது சமூகத்தை எதிர்த்துப்போராடுவது. ஆனால் அது இலட்சியவாதிகளுக்கே சாத்தியம். அந்த வேகமும் தியாகமும் இல்லை என்றால்தான் இந்த வழியை சொல்லியிருந்தேன்

ஒரு, ஓர் என்ற இலக்கணம் உரைநடைக்காக உருவாக்கப்பட்டதல்ல. செய்யுளுக்காக உருவாக்கப்பட்டது. நம்முடைய இலக்கணங்கள் முழுக்க செய்யுளுக்குரியவை. ஆகவே ஒலி ஒருமையை அவை முக்கியமாக கருதுகின்றன

இன்றுள்ள உரைநடையை நவீன எழுத்தாளர்கள் நூறாண்டுகளாக எழுதி எழுதி உருவாக்கினார்கள். அவ்வாறு உருவாகி வந்த உரைநடைக்கு அதற்குரிய விதிகள் உள்ளன. அவற்றை எழுத்தாளர்களின் நுண்ணுணர்வே தீர்மானிக்கிறது. கொண்டும் கொடுத்தும் சமூகத்துடன் அவர்கள் கொண்டுள்ள உரையாடல் தீர்மானிக்கிறது.

அந்த நுண்ணுணர்வின்படி ஓர் என்பது ஓங்கிய ஓசை உள்ளதாக அவர்களுக்கு படுகிறது. 'தேவை ஓர் இடம்' என்றால் அது அறைகூவல் போல ஓங்கி ஒலிக்கிறது. ' தேவை ஒரு இடம்' என்றால் அது சாதாரணத்தன்மையுடன் ஒலிக்கிறது.

இலக்கணம் எந்த வாழும் மொழியிலும் மொழியை தீர்மானிப்பதாக அமையாது. அது ஒரு குறைந்தபட்ச பொதுப்புரிதல் மட்டுமே. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் என்று சொன்ன ஞானியின் மரபுள்ளது தமிழ்

பொதுவாக இந்தவகையான இலக்கண விவாதங்களில் ஈடுபடுபவர்களுக்கு இயற்றமிழ் வாசிப்பே இருப்பதில்லை. எதையும் வாசிக்காமல், எதையும் உணராமல், மொழியறிஞராக காட்டிக்கொள்வதற்கான குறுக்கு வழி இது

## (3) ஓரினச்சேர்க்கையும் இந்தியப்பண்பாடும்

ஜெ,

ஓரின சேர்க்கை பற்றி உங்களுடைய ஒரு பழைய இடுகையை பார்த்தேன்.

எனக்கு உள்ள சந்தேகம் என்னவென்றால், இப்போது இந்திய சூழலில், இதற்காக குரல் கொடுப்பவர்களில் பலர் அமெரிக்க மேற்கத்திய கலாச்சாரத்தின், துதர்களாகவே இருக்கிறார்கள். உதாரணம் பார்க்க.. [பிங்க்pages]

இவர்களுக்கு இந்திய பண்பாடு பற்றிய இடுபாடு இருக்குமா என்பது எனக்கு சந்தேகமாக இருக்கிறது..

இதனாலேயே, இதன் மூலம் நன்மை பிறக்கும் பட்சத்தில், அது நம் வேர்களை பிடுங்கி , மேற்கத்திய கலாச்சாரத்தை நிறுவதன் மூலமே நடக்கும் அல்லவா?

நன்றி,
சிவா

பி கு:
க) நான் சரியாக விளக்கி இருக்கிறேனா என்று தெரியவில்லை. குழப்பியிருந்தால் தெரியபடுத்தவும்.

உ) என்னுடைய தனிப்பட்ட கருத்து : முதலில் இந்த ஓரினசேர்க்கையாளன் என்பதே, ஒரு வட்டத்துக்குள் மனிதனை குறுக்க நினைப்பது. காமத்தை பொறுத்த வரை, மனிதனின் தேவைகள், மிக மிக குழப்பமானது. அது நபருக்கு நபர் மட்டுமல்லாமல், ஒரே நபருக்கே நேரத்துக்கு நேரம் , சூழலுக்கு சூழல் மாறுபடுகிறது.

அன்புள்ள சிவா,

ஒரு அடிபப்டையான பிரச்சினையை அது இந்தியப்பண்பாட்டுக்கு சாதகமா பாதகமா என்ற அடிப்படையில் அணுகுவதில் எனக்கு உடன்பாடில்லை. அந்த பிரச்சினைக்கான தீர்வென்ன என்ற அடிப்படையில் மட்டுமே அணுகவேண்டும்.

இந்தியப்பண்பாடு என்பது சில சமகால ஒழுக்கவிதிகளில் உள்ளது என்பது ஒரு வகையான பாமர நம்பிக்கை. இந்து மதமும் சரி இந்தியப்பண்பாடும் சரி ஒழுக்கத்தை, நெறிகளை முதன்மையாக்குவன அல்ல.

இந்துமரபு ஒழுக்க நெறிகளை ஸ்மிருதிகள் என அவை வகுக்கின்றது. காலந்தோறும் மாறக்கூடியவை அவை. மாறாதவை சுருதிகள். மெய்ஞானத்தை விளக்கும் நூல்கள். அந்த மெய்ஞானத்தின் அடிப்படையிலேயே இந்துப்பண்பாடு அமைந்துள்ளது.

இந்தியாவின் மரபான பண்பாடென்பது இந்து பௌத்த சமணப்பண்பாடுதான். அவை ஒருபோதும் மானுடசமத்துவத்துக்கும் மானுட இன்பத்துக்கும் எதிரான மெய்யியல் கொண்டவை அல்ல. அவற்றின் ஒழுக்கநெறிகள் எப்போதும் மறுபரிசீலனைக்குரியவைதான்.

இந்துப்பண்பாடு ஓரினச்சேர்க்கை போன்றவற்றை பரிவுடன் மட்டுமே அணுகியிருக்கிறது என்பதற்கு நூற்றுக்கணக்கான நூலாதாரங்களைக் காட்டமுடியும் [மாறாக ஓரினச்சேர்க்கையை பெரும் கீழ்மையாக கருதி சபரிமலை அய்யப்பன் ஓரினச்சேர்க்கையில் பிறந்தவர் என கேலிசெய்து திரிந்தவர்கள் இங்குள்ள நாத்திகப்பிரச்சாரகள்தான்]

நம்மைப்பொறுத்தவரை மானுடசமத்துவம் சார்ந்த, மனித உரிமை சார்ந்த பெரும்பாலான சிந்தனைகள் ஐரோப்பிய தாராளவாதசிந்தனை மரபில் இருந்தே வந்துள்ளன. நேற்று பெண்கல்விக்காக பேசியவர்கள் ஐரோப்பாவால் தூண்டுதல் பெற்றவர்களே. இன்று ஓரினச்சேர்க்கைக்காக பேசுவபவகள் அப்படி இருபப்தில் என்ன தவறு?

அவர்கள் இந்தியப்பண்பாட்டை பொருட்படுத்தவில்லை என்றால் இந்தியப்பண்பாட்டில் இருந்து ஓரினச்சேர்க்கையாளர்களுக்கான உரிமைகளுக்காக வாதங்களை கண்டுபிடித்து குரல் எழுப்பலாமே

## (4) உகவர் வாழ்க்கை

அன்புள்ள ஜெயமோகன் ஐயாவுக்கு வணக்கம்.

*"முடியாது என்றானபோதும் நான் முயன்று தான் தோற்கிறேன்.*

*விடியாது என்றானபோதும் நான் கிழக்கையே பார்க்கிறேன்.*

*இயற்கையின் தீர்ப்பில் நானே குற்றவாளியா?*

*அதை திருத்தி எழுதத்தானே யாரும் இல்லையா?"*

எனது கைபேசியின் அழைப்பொலி இது. பேரன்பு திரைப்படத்தில் இடம்பெற்ற கருணாகரனின் வரிகள்.

திரு.எஸ்ஸின் கடிதத்தைப் பார்த்த பின்னர் எழுதுகிறேன். உங்கள் இணையத்தளத்தை நீண்ட நாளாகவே வாசிப்பவன் என்றாலும், விக்கி விஜயுடனான உங்கள் பழைய கடிதங்களைப் பார்த்த போதே எழுத நினைத்தவன் என்றாலும், "இலக்கியத்தில் கேட்க எவ்வளவோ இருக்க இதை இவரிடம் எழுத வெட்கமாக இல்லை?" என்ற தயக்கத்தாலும் இதுவரை கடிதம் எதுவும் எழுதவில்லை. ஆனால் எஸ்ஸுக்கான உங்கள் மறுமொழியைப் பார்த்த பின்னர் தெரிந்து கொண்டேன், உங்களைத் தவிர வேறு யாரிடமும் என் மனக்குறையைக் கூறமுடியாதென்று.

என்னைப் பற்றியெல்லாம் அதிகம் கூற விரும்பவில்லை. பிறகொரு முறை உங்களை சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கும் போது இவனாக இருக்குமா என்று நீங்கள் ஊகித்துவிடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கை தான். அந்த அளவுக்கு எனக்குள் மறைந்திருக்கும் 'அந்த' அடையாளத்தை வெறுக்கிறேன்.

சுருக்கமாகச் சொன்னால் முப்பதை அண்மிக்கும் ஒரு இளைஞன். உங்கள் ஊட்டி முகாம், விஷ்ணுபுரம் விழாக்களிலெல்லாம் கலந்து கொள்ள முடியாத இயந்திர உலகில், ஒரு பெருநகரத்தில் வசிப்பவன்.

ஒரு விதத்தில் நான் அதிர்ஷ்டம் செய்தவன். அழகான குக்கிராமத்தில், அருமையான சிறிய குடும்பத்தில் பிறந்தவன் நான். போதும் போதும் என்னும் அளவுக்கு பேரன்பு. அந்த அன்புக்கு முன் பருவ வயதில் என்னுள்

நிகழ்ந்துகொண்டிருந்த இந்த உணர்வை பெரிதாக எண்ணவோ, அதற்கு என்னை ஒப்புக்கொடுக்கவோ நான் தயாராக இருக்கவில்லை.

ஆனால் அந்த மாற்றம் ஒருவித குழப்பத்தை ஏற்படுத்தியது உண்மை. ஒரு மஞ்சள் பத்திரிகையின் கேள்வி பதிலில் "இந்த உணர்வு எல்லா ஆண்களுக்கும் ஏற்படுவது தான். கவலைப்படத்தேவையில்லை. கொஞ்ச நாட்களில் மாறிவிடும்" என்று இன்னொருவருக்கு வழங்கப்பட்ட பதில் தான் பதினைந்து வயதில் எனக்கு மிகப்பெரிய ஆறுதல். ஆனால் என் விடயத்தில் அது பொய் என்பதை வளர வளர உணர்ந்துகொண்டேன்.

அது படிப்பு – தொழில் நிமித்தம் குடும்பத்தை விலகி தொலைதூரம் வந்தபிறகு நிகழ்ந்தது. நண்பர்களில் கட்டுமஸ்தான ஒருவனோடு பழகுவதில் எனக்கு நாட்டம் அதிகம். அவனை இன்னொரு தோழியோடு இணைத்து நண்பர்கள் கேலி செய்தபோது, இறுதியில் அவனே அவளுடன் காதலில் விழுந்தபோது, நான் கடும் கோபமும் ஏமாற்றமும் அடைந்தேன். என் வாழ்வின் வலிமிகுந்த நாட்கள் அவை.

அப்போது எனக்குக் கடவுள் நம்பிக்கை அதிகம். விரைவிலேயே மீண்டு விட்டேன். இணையம் இன்னொரு கதவைத் திறந்து நான் யார் என்று காட்டியது. என்னை முழுமையாக உணர்ந்துகொண்டேன். முழுவதுமாக உடைந்து விழுந்தேன்.

உகவர்கள் ஆணை நேசிப்பவர்கள் என்பதால் அவர்களிடம் பெண்மை நிறைந்திருக்கும் என்பது இந்த சமூகம் நிலைநிறுத்தியிருக்கும் அபாண்டமான பொய். நடை, உடை, பாவனை எதிலுமே என் வேற்றுமையை இனங்காண முடியாத அளவுக்குத் தான் என்னையும் இயற்கை படைத்திருக்கிறது. ஒரு உகவனாகவே சொல்கிறேன், நளினம் கொண்ட எந்த ஆண் மீதும் எனக்கு ஈர்ப்பு வந்ததில்லை. நான் காமுறுவது தூய ஆண்மை மீது மாத்திரமே.

நீங்கள் பகிர்ந்த ஒரு மலையாளக் கவிதை நினைவுக்கு வருகிறது.

"நான் உங்களை நேசிக்கிறேன்."

"மன்னிக்கவும். நான் ஒரு மாயிழை."

"ஓ. நீங்கள் இருவரும் ஒன்றாக இருக்கும் போது ஆண் யார்?"

"நான் ஒரு பெண்"

“அதைக் கேட்கவில்லை. நீங்கள் இரு பெண்கள் ஒன்றாக இருக்கும் போது ஆண் பாத்திரத்தை ஏற்பது யார்?”

“ஹஹா. நான் ஒரு பெண்”

நினைவில் இருந்ததை எழுதினேன். சரியா தெரியவில்லை. இந்தக் கவிதையை எழுதிய கைகளை முத்தமிட வேண்டும்.

(விக்சனரியில் உகவன், மாயிழை ஆகிய கலைச்சொற்களை பார்த்தேன். கவித்துவம் நிறைந்தவை. வசை போல தோன்றும் ஏனைய எல்லாச் சொற்களுக்கும் நடுவே இவற்றை எனக்கு மிகவும் பிடித்திருந்தது.)

நீங்கள் சொல்லும் அந்த ஐரோப்பியப் பயணத்துக்கு என் வாழ்வில் சாத்தியமே இல்லை. சுற்றுலாவுக்காக அன்றி, இந்த இந்திய மண்ணை, இனிய மண்ணை விடுத்து என்னால் கால்களைத் தூக்கமுடியாது. ஆக நெடுநாளாகவே அந்த இரட்டை வாழ்வுக்காக தான் தயாராகிக்கொண்டிருக்கிறேன்.

ஒன்றும் சொல்லப்போவதில்லை என்று எவ்வளவோ சொல்லி விட்டேன். இத்தனையும் போதும். இன்று எஸ்ஸின் கடிதத்தைப் பார்த்துவிட்டு பரபரப்பாக இக்கடிதத்தை எழுதுகிறேன் என்றாலும், இந்த அவசரத்துக்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. இந்த வயதில் எல்லோருக்கும் இனிய கனவுகளையும் குறுகுறுப்பையும் அளிக்கின்ற அந்தச் சொல் என் வாழ்க்கையில் இடியாக விழுந்திருக்கிறது. திருமணம்.

வீட்டில் நச்சரிப்பு கூடிவிட்டது. தேடி வந்த சம்பந்தங்கள் பலவற்றை தவிர்த்து விட்டேன். அம்மாக்களின் மாறாத அதே வசனம். கண் மூட முன் உன் கல்யாணக்காட்சியைக் கண்டு இரண்டு பேரப்பிள்ளைகளை கொஞ்சவேண்டும். என் தவிப்பை எப்படி இவர்களிடம் சொல்லி புரியவைப்பது?

உள்ளே பெருங்காமம் சுழித்தோடினாலும், நான் அதை யாருக்கும் திறந்து காட்டியதில்லை. முதல் நண்பனுக்குப் பிறகு ஓரிரு ஆண்கள் என் வாழ்க்கையில் கடந்து போனாலும், யாரோடும் உடலைப் பகிர்ந்துகொண்டதில்லை. சுருக்கமாகச் சொன்னால் தைரியம் இல்லை, சமூகம் மீதான அச்சம். நினைத்தது போலவே அவர்களும் ‘தூய ஆணா’கவே இருந்தார்கள். தாங்க முடியாத வலியுடன், அவர்களுக்கான பெண்களிடம், அவர்களை வெட்டி எறிந்து விட்டு நானும் நகர வேண்டி இருந்தது. ஆனால்

உள்ளே அந்த உகவன் படும் பாட்டையும் என்னால் சகிக்கமுடியவில்லை. பெருங்குரலெடுத்து கதறி அழ முடியாத வேதனைகள் எத்தனை கொடுமையானவை!

சில மாதங்களாக திரைப்படங்களில் நெகிழ்வான காதல் காட்சிகளைக் காணும் போது துடித்துப்போகிறேன். "என்னடா இப்பல்லாம் ரொம்பத்தான் ஃபீல் பண்றே" என்று நண்பர்களே வாய்விட்டுக் கேட்கிறார்கள். "எனக்கு இதெல்லாம் சாத்தியமில்லை, என்றைக்குமே சாத்தியமில்லை என்பதை உணர்ந்து தான் அழுகிறேன்" என்று எப்படி அவர்களிடம் சொல்வது?

அன்றொரு நாள் பேருந்தில் திரைப்படமொன்று. முதலிரவுக்காட்சி. கட்டுப்படுத்த முடியாமல் வெடித்து அழுதேன். பக்கத்தில் அமர்ந்திருந்த பெரியவர் பதறிப்போய் விட்டார். நெருங்கிய ஒருவரின் சாவு என்று கூறி சமாளித்துவிட்டேன். என்னால் இயலாத ஒரு வாழ்க்கையை, ஆனால் எனக்காக காத்திருக்கும் ஒரு வாழ்க்கையை அஞ்சி கணம் கணம் செத்துக்கொண்டிருப்பது யாருமில்லை, நான் தான் என்பதை அவருக்கு எப்படிச் சொல்லி புரியவைப்பது?

நான் பார்க்க ஓரளவு வாட்டசாட்டமானவன். எந்தளவுக்கு என்றால், இரண்டு பெண்களே முன்வந்து தங்கள் காதலைச் சொல்லுமளவு. அவர்களில் இன்று வேறொருவனைத் திருமணம் முடித்து வாழும் ஒரு நண்பியை நினைவுகூர்கிறேன். திருமணத்துக்கு எனக்கு பத்திரிகை அளிக்க வந்தவள் "ஆனால் கடைசிவரை ஏன் என்னை மறுத்தாய் என்பதைத் தான் புரிந்துகொள்ளவே முடியவில்லை" என்று கண்ணீர் சிந்தியபடியே விடைபெற்றதை எண்ணும் போதெல்லாம் இன்றும் வலிக்கிறது.

மனதை மாற்றவேண்டும் என்று பாலுணர்வுத் தளங்களுக்கு போனாலும், அங்கு கூட பெண்ணுடல்கள் அருவருப்பை ஏற்படுத்துகின்றன. அங்கிருந்து உகவர்களுக்கான தளங்களுக்குப் பாய்ந்து மாயத்திரையில் ஆண்மையை, தசைகளை, தோள்களை சுவைப்பதும், காட்டாற்று வெள்ளம் வடிந்த பின்னர், வெட்கி விம்மி அழுவதும் இப்போது வாடிக்கையாகி விட்டது.

என் வாழ்க்கையில் மற்ற எவரும் அனுபவித்திருப்பதை விட நாடகீயத் தருணங்கள் அதிகம். நீங்கள் சொல்வது போலவே எவரும் பார்க்காத பக்கங்கள், சிந்திக்காத கோணங்கள. எழுத்துத்துறையில் முயற்சி செய்ய ஆசை இருக்கிறது. அது முடியாவிட்டாலும் என் தொழில் துறையில்

பிரபலமடைவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அந்த நம்பிக்கைகளைக் கலைப்பவனும் உள்ளே தவித்தபடி அமர்ந்திருக்கும் அந்த உகவன் தான். "இத்தனை தியாகங்களும் போதாதா? வாழ்நாளாலெல்லாம் என்னை ஏங்க வைத்து தினம் தினம் சாகப்போகிறாயா?"

போதும். முடித்து விடுகிறேன்.

மற்றவர்களைப் போல் நானும் இயல்பு வாழ்க்கையே வாழவேண்டும், குழந்தைகளைப் பெற்று கொஞ்சி விளையாடவேண்டும் என்பது என் நப்பாசை. ஆனால் இன்னொரு பெண்ணுடன் வாழ்க்கையைப் பகிர்வதை நினைத்தே பார்க்க முடியவில்லை. ஒருவேளை நம்பி வந்தவள் என்பதற்காக அவளை நான் போலியாக மகிழ்விக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை அது நரகமே தான். முதிய வயதில் தங்கள் வாழ்க்கைத் துணைகளைத் தேடிக்கொண்ட உகவர்களின் கதைகள் அச்சுறுத்துகின்றன. இந்தப்பக்கம் அம்மாவின் ஏக்கம். என் திருமண விடயத்தில் நான் என்ன முடிவை எடுப்பது?

அல்லது ஒரு இலக்கியவாதியிடம் கேட்பதற்குப் பதில் யாரேனும் மனோதத்துவ நிபுணரை நான் நாடவேண்டுமா? என் தொழில், எதிர்காலம் கருதி அப்படி ஒருவரை நாட நான் அஞ்சுகிறேன். உங்களைப் போல் ஒருவர் என் தந்தையாகவோ நெருங்கிய நண்பராகவோ இருந்திருந்தால் மடியில் விழுந்து கதறி அழுதபடி இக்கேள்வியைப் கேட்டிருப்பேன். அதற்கு வாய்ப்பில்லை. தயவுசெய்து ஏதாவது பதில் தாருங்கள் ஐயா.

**வி**

அன்புள்ள வி

தொடர்ச்சியாக இந்தவகை கடிதங்கள். இது இவ்வளவு எண்ணிக்கையில் அதிகமாக இருக்குமென நான் நினைக்கவில்லை.

முதலில் செய்யவேண்டியது இதை இயல்பாக ஏற்றுக்கொள்ளுதல்.எவரும் தங்கள் பிறவி இயல்பான மூளைக்கூறுடன் போட்டியிட முடியாது. கணக்கு சம்பந்தமான ஒரு வேலையை நான் பிழைப்புக்காகச் செய்தாகவேண்டும் என்றால் உடைந்துவிடுவேன். அதனுடன் மல்லுக்கட்டி, துயரடைந்து

வாழ்க்கையை வீணடிக்கவேண்டியதில்லை. இயல்பாக ஏற்றுக்கொள்ளுதல், சமூகத்திற்காக தன்னை இரண்டாகப் பிரித்துக் கொள்ளுதல். அதுவே முதல்தேவை

அதற்கு தேவையென்றால் உளவியலாளரை நாடலாம். ஆனால் பெரும்பாலான உளவியலாளர்களுக்கு இதெல்லாம் தெரியாது, ஏற்றுக்கொள்ளவும் முடியாது. பொதுவாக இங்கே இலக்கியவாசகரிடம் சொல்ல உளவியலாளர்களுக்கு ஒன்றுமே இல்லை.அத்துடன் மனக்கொந்தளிப்பு அல்லது பாலியல்நாட்டம் ஆகியவற்றுக்கு எதிராக ஏதேனும் அமைதிப்படுத்தும் மாத்திரைகளை இயந்திரத்தனமாக தந்துவிட்டார்கள் என்றால் பெரும் சிக்கலில் மாட்டிக்கொள்வீர்கள்.

திருமணம் செய்துகொள்ளவே கூடாது. ஏனென்றால் மிகச்சிலநாட்களிலேயே வெளிப்பட்டுவிடும் உடல்ரகசியம் இது. பெண்கள் முதல்நாளிலேயே உணர்ந்துகொள்வார்கள் – சம்பிரதாயமான பழையகாலப் பெண்கள் கூட. அது பெரும்கொந்தளிப்பை, துயரை இருவருக்கும் இருவர் குடும்பத்திற்கும் அளிக்கும். இன்னொருவர் வாழ்க்கையை வைத்து விளையாட எவருக்கும் உரிமை இல்லை. எனக்கு திருமணத்தில் ஆர்வமில்லை என உறுதியாகத் தெரிவித்துவிடவேண்டியதுதான். வேறு வழியே இல்லை.

இரட்டைவாழ்க்கை, அல்லது தனக்கான பாலியல்வாழ்க்கையை தேடிக்கொள்வது இன்று இயல்பானது. இணையம் அதற்கான பல அமைப்புக்கள் கூடுகைகள் இன்றுள்ளன என்றே நினைக்கிறேன். ஒருபால் நாட்டம் கொண்டவருக்கு ஒருபால்நாட்டம் கொண்ட இன்னொருவரே இயல்பான துணையாக இருக்கமுடியும். பிறருக்கு அது பெரும் ஒவ்வாமையைத்தான் அளிக்கும். ஏனென்றால் நான் ஏற்கனவே சொன்னதுபோல இது பெரும்பாலும் மூளையின் இயல்பு சார்ந்த உளநிலை. அத்தகைய குழுமங்களை இணையத்தில் தேடிக் கண்டடையமுடியுமென நினைக்கிறேன்

என்ன கவனிக்கவேண்டும் என்றால் பழையகாலங்களில் இது ஒரு ரகசிய அமைப்பாக இருந்தமையாலேயே குற்றத்துடன் சம்பந்தப்பட்டிருந்தது. சில திரையரங்குகள் பூங்காக்கள் இதற்கான இடமாக இருந்தன. குற்றவுலகுடனான தொடர்பு மேலும் பிரச்சினைகளைக் கொண்டு வரும். அது இப்போது பெரும்பாலும் தவிர்க்கப்பட்டுள்ளது என நினைக்கிறேன்

அனைத்திற்கும் மேலாக ஒன்று உண்டு. திரு எஸ் எழுதியபோது அதில் ஒரு கூறு இருந்தது. அவர் தேர்ந்த இலக்கியவாசகராகத் தெரிந்தார். மொழியாளுமை கொண்டவராக இருந்தார். அதாவது அவருடைய வாழ்க்கையின் அர்த்தமும் சாரமும் வேறு. அது பாலியலால் தீர்மானிக்கப்படுவதில்லை. பாலியல் அவருடைய வாழ்க்கையின், ஆளுமையின் மிகச்சிறிய பகுதி மட்டுமே. எவரானாலும் அவ்வாறு வாழ்க்கையை அர்த்தப்படுத்திக்கொள்ள இன்னொரு தீவிரமான தளம் இருந்தாகவேண்டும். அவர்களே தங்களைப் பற்றி நிறைவாக எண்ணிக்கொள்ள முடியும்.

அவ்வாறு ஒரு புறவாழ்க்கை இல்லாதபோது, அது வெறும் உலகியல்செயல்பாடாக மட்டுமே இருக்கும்போது வாழ்க்கையில் ஒரு வெறுமை தோன்றுகிறது. அந்நிலையில்தான் அதை பாலியலைக்கொண்டு நிரப்ப முயல்கிறார்கள். அதன்பொருட்டே அவர்கள் பாலியலில் மூழ்கிக்கிடக்கிறார்கள் – எண்ணம் என்ற அளவிலாவது. அது மேலும் ஒவ்வாமையை தனிமையை சலிப்பை அளிக்கிறது. உங்கள் நிலைமையில் மேலும் பெரிய வதையாக ஆகிவிடுகிறது

நான் அவருக்குச் சொன்னதே உங்களுக்கும். பாலியல் என்பது வாழ்க்கையின் ஒரு சிறு பகுதி மட்டுமே. குழந்தைகள் பெற்றுக்கொள்வதும், வளர்ப்பதும், குடும்பமும் கூட ஓர் அறிவியக்கவாதியின் வாழ்க்கையில் மிகச்சிறிய பகுதிதான். மிகப்பெரும்பாலான பகுதியை தீவிரமாக்கிக் கொண்டால், பொருளுடையதாக ஆக்கிக்கொண்டால் இதை எளிதாகக் கையாளமுடியும்.

## (5) சேர்ந்து வாழ்தல்

அன்புள்ள ஜெயமோகனுக்கு

வணக்கம்  ஒரு சந்தேகத்தை உங்களிடம் கேட்கலாம் என்று தோன்றியதால் இதை எழுதுகிறேன்.

ஓரினச்சேர்க்கை மாதிரியான சமூகத்தால் அருவருப்பாக பார்க்கப்பட்டதையே எழுதும் நீங்கள் லீவிங் டுகதர் அதாவது திருமணம் ஆகாமலேயே சேர்ந்து வாழ்தல் என்பதை பற்றி ஏதும் எழுதிய மாதிரி தெரியவில்லையே ஏன்?( நான் 2008 இருந்து இந்த தளத்தை படித்து வருகிறேன்) நீங்கள் உடனடி அரசியல் நிகழ்வுகளுக்கு பதில் சொல்வதில்லை என்பது எனக்கு தெரியும். ஆனால் இது சமீப காலமாக இது சமூகத்தில் தாக்கத்தை ஏற்படுத்தும் விசயமாக மாறி வருகிறதாக நான் நினைக்கிறேன். (சமீபத்தில் டீவி நடிகை விவகாரம்)

நீங்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்பதை கடைபிடிக்கும்  ஒழுக்கவாதி என்பதால் வேண்டுமென்றே இதை பற்றி எழுதுவதை தவிர்கிறீர்களா? மேலை நாடுகளில் இது அதிக அளவில் இருப்பதாக நினைக்கிறேன். நம் நாட்டிலும் நகரங்களில் சிறு அளவில் வளர்ந்து வருவதாக இணைய செய்திகள் வழியாக ஊகிக்கிறேன் இது சரியா?

வெறும் காம இச்சை மட்டும் தான் லிவிங் டுகதருக்கு காரணம் என்று சொல்லிவிட முடியாது என்றே நினைக்கிறேன். அதுக்கு வேறு எத்தனையோ வழி இருக்கிறது. இந்த லிவீங் டுகதரை எதிர்ப்பவர்கள் வாழும் வாழ்க்கை எப்படிபட்டது? ஜாதி, மதம், பணம் மட்டுமே பார்த்து பெற்றோர் பார்ந்த கல்யாணம் செய்து அல்லது பணம், அழகு மட்டுமே பார்த்து காதல் திருமணம் செய்து காமத்தில் ஈடுபடுவர்களை என்னவென்று சொல்வது?

மேலை நாடுகளில் பிரபலங்களில் பலர் லிவிங் டுகதரில் இருந்து ஒன்று அல்லது இரண்டு குழந்தை பிறந்த பிறகு கூட திருமணம் செய்து கொள்கிறார்கள். இதை அங்குள்ள சமூகம் அங்கீகரித்து விட்டதாகவே நான் நினைக்கிறேன். இங்கிலாந்து போல சில நாடுகளில் சட்டப்பூர்வ அங்கிகாரம் கூட தந்திருப்பதாக இணையத்தில் படித்த நியாபகம். கலாச்சாரம், பண்பாடு இந்தியாவுக்கு மட்டுமே சொந்தம் கிடையாது. உலகின் அனைத்து நாடுகளுக்கும் அது இருப்பதாகவே நினைக்கிறேன்.

நான் புரிந்து கொண்டது என்னவென்றால் சிந்தனை பின்புலம், ரசனை, கேரக்டர் எதுவுமே தெரியாமல் ஒருவரை திருமணம் செய்வது எப்படி என்ற தயக்கத்தில் இருந்து தான் இது தோன்றியதாக நினைக்கிறேன். பெற்றோர் பார்த்து நிச்சியக்கும் திருமணம் மட்டும் இதற்கு காரணமாக இருக்க வாய்ப்பு இல்லை. காதல் திருமணமும் இதற்கு மிக முக்கிய காரணம் தான்.

ஏன் என்றால் காதலில் துணையை எளிதாக ஏமாற்றி விடலாம். ஒரு நாளைக்கு ஒரு மணிநேரமோ அல்லது இரண்டு மணி நேரமோ நேரில் பார்க்கும் போது மட்டும் நமது உண்மையான முகத்தை மறைத்து வேறு மாதிரியாக நடித்து விடலாம். காதலிக்கும் போது நமது பாசிட்டீவை மட்டும் காட்டி ஏமாற்றி விடலாம். ஆனால் திருமணத்துக்கு பிறகு நமது நெகட்டீவ் மட்டும் தான் நமது துணைக்கு பெரிதாக தெரியும். ஆனால் லிவிங் டுகதரில் இருபத்து நான்கு மணிநேரமும் துணையின் கூடவே சில மாதங்களோ அல்லது வருடங்களோ இருக்கும் போது ஏமாற்ற முடியாது. ஏதாவது ஒரு கட்டத்தில் நமது உண்மையான முகம் வெளிப்பட்டு விடும்.

அதுவும் இல்லாமல் யாரும் எடுத்த எடுப்பிலேயே லீவிங் டுகதர் போய்விட மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். எல்லா காதலரையும் போல சில மாதங்களோ அல்லது வருடங்களோ காதல் செய்து திருமணத்துக்கு முன்பாக என்னோட துணை இத்தனை நாள் என்னிடம் காட்டிய முகம் உண்மைதானா? எனக்கும் அவருக்கும் ஒத்து போகுமா என்று இரண்டு பேர் வாழ்ந்து பார்த்தால் என்ன தவறு? கள எதார்த்தம் எனக்கு தெரியாது. நான்

இருப்பது மதுரை பக்கம் ஒரு சிற்றூர்)
கலாச்சாரம் கெட்டுவிடும் என்று கலாச்சர காவலர்கள் சொல்ல கூடும். பெற்றோர் பார்த்த துணையை பற்றி எதுவுமே தெரியாமலோ அல்லது காதல் மூலம் அரைகுறையாக தெரிந்து கொண்டோ திருமணம் செய்து திருமணத்துக்கு பிறகு துணைக்கு உண்மையாக இல்லாமல் கள்ள காதலில் ஈடுபட்டால் கலாச்சாரம் கெடாதா?

நான் பார்த்த வரை என்னை சுற்றி உள்ள சமுதாயத்தில் உள்ள தம்பதிகளில் நூற்றுக்கு தொண்ணூற்று ஐந்து சதவிகிதம் பேர் திருமண வாழ்வில் மகிழ்ச்சியாக இல்லை என்றே நினைக்கிறேன். குழந்தைகளுக்காக வேறு வழி இல்லாமல் சகித்து கொண்டு தங்கள் வாழ்வை தியாகம் தான் செய்கிறார்கள். நாளை இவர்களின் பிள்ளைகளும் அவர்களின் குழந்தைக்காக தங்கள் வாழ்வை தியாகம் செய்யவே வாய்ப்பு அதிகம். ஆக மொத்தம் நாடு முழுக்க தியாகிகள் தான் நிரம்பி வழிகிறார்கள். மிக பெரும்பான்மை மக்கள் இப்போது உள்ள திருமண அமைப்பில் மகிழ்ச்சியாக இருப்பது போல தெரியவில்லை.

என்னை பொறுத்தவரை தனிமனிதனுக்காக தான் கலாச்சாரம், மதம், ஒழுக்க நெறி அத்தனையும். ஆனால் இப்போ தலைகீழாக இருப்பதாக நினைக்கிறேன். கலாச்சாரம், மதம், ஒழுக்க நெறியின் பெயரால் தனிமனிதனின் மகிழ்ச்சி பாதிக்கப்படுகிறது. இதற்கு இந்த லிவிங் டுகதர் ஒரு தீர்வாக இருக்க வாய்ப்பு உள்ளதா? லிவிங் டுகதர்தான் முழு தீர்வு என்று நான் வாதிடவில்லை. இப்போது இருக்கும் திருமண அமைப்பை மேம்படுத்த இது உதவுமா? ஆக மொத்தம் ஒட்டு மொத்த குடும்ப அமைப்பையே இந்த லிவிங் டுகதர் கேள்விக்குறி ஆக்குகிறதா? இல்லை மேலை நாடுகளில் டைவர்ஸ் செய்தால் பெண்களுக்கு மிக அதிக அளவில் இழப்பீடு தர வேண்டி இருக்கும். அதனால் தான் அங்கு உள்ள ஆண்கள் திருமணத்துக்கு பயந்து மாற்று வழியாக லிவிங் டுகதரை தேர்ந்தெடுக்கிறார்களா? இது இந்தியாவில் வளர்ந்தால் சமூக சீர்கேடு தான் உண்டாகுமா?

“மனவுறவு மீறல் குற்றமா?” என்ற தங்களின் சமீபத்திய கட்டுரை எனக்கு பல தெளிவுகளை கொடுத்தது. ஓரினச்சேர்க்கையாளர் விசயத்தில் கூட பல

வருடங்களுக்கு முன்பே தைரியமாக அவர்கள் தரப்பு நியாயத்தையும், அறிவியல் பூர்வமாக அவர்களை மற்ற நாடுகள் அங்கீகரித்தையும் எழுதியிருந்தீர்கள். உங்கள் எழுத்தை படித்த பிறகு தான் எனக்கு ஓரினச்சேர்க்கையாளர்கள் மீது இருந்த வெறுப்பு போனது. அதற்கு முன்னால் பாமர மக்களை போலவே ஓரினச்சேர்க்கையாளர்களை கேவலமாகவே பார்த்தேன். (இப்போதும் ஓரினச்சேர்க்கையை முழுமையாக ஏற்பதில் எனக்கு மாற்று கருத்து உண்டு. ஆனாலும் முன்பு போல் அசிங்கமாக பார்ப்பதில்லை)

கடைசியாக நான் கேட்க வருவது இதுதான். எந்த ஒரு விசயமும் எந்த ஒரு சமுகத்திலும் ஒரு நேர்மறை காரணம் இன்றி வளராது என்றே நான் நினைக்கிறேன். லிவிங் டுகதர் மேலை நாடுகளில் வளர்ந்து வருவது கண்கூடு. நாளை இங்கும் வளர வாய்ப்பு அதிகம் என்றே நினைக்கிறேன்.

லிவிங் டுகதரின் நேர்மறை மற்றும் எதிர்மறை அம்சங்கள் என்ன? லிவிங் டுகதரை சட்டம் எந்த விதத்தில் அதை முறைப்படுத்த முடியும். இதில் சட்டத்தின் பங்கு என்ன? நம் நாட்டு கலாச்சாரத்தில் லிவிங் டுகதரில் இருப்பவர்கள் சந்திக்கும் சவால்களை பற்றி இந்திய கலாச்சாரம் மற்றும் வரலாற்று அறிவுடைய உங்களை போன்றவர்களால் தான் விளக்க முடியும் என்று நினைக்கிறேன்.

அன்புள்ள
கார்த்திகேயன்.J

(உங்கள் வீட்டில் வயதுக்கு வந்த பிள்ளைகள் இருப்பதால் இதை பற்றி எழுத நீங்கள் தயங்கலாம். அப்படி இருந்தால் பதில் எழுத வேண்டாம். ஏன்னா உங்க இடத்துல நான் இருந்தாலும் இந்த கேள்விக்கு பதில் எழுதுவேன்னா என்பது சந்தேகம் தான்)

அன்புள்ள கார்த்திகேயன்

நான் என் வீட்டு உணவுமேஜையில் பேசாத எதையும் எழுதுவதில்லை. என் பிள்ளைகள் இருவருமே இந்தத் தளத்தின் வாசகர்கள்தான்

சேர்ந்துவாழ்வது என்பது இங்கே எப்போதும் இருந்துகொண்டுதான் இருந்தது. **சேத்துக்கிட்டது** என்ற வார்த்தையே புழக்கத்தில் இருந்தது. அது ஏன் தவிர்க்கப்பட்டது என்றால் அதன் வழியாக உருவாகும் சட்டச்சிக்கல்காரணமாக. அந்தக்குழந்தைக்கு இயல்பான சட்டப்பாதுகாப்பு இல்லை. தந்தை அதன் பொறுப்பை ஏற்கவேண்டியது இல்லை. நடைமுறையில் குழந்தையின் பொறுப்பை முழுமையாகப் பெண் தலையில் கட்டிவிடுவதே சேர்ந்துவாழ்வது என்று இங்கே உள்ளது

ஆகவேதான் மணவுறவு கட்டாயம் என்னும் பேச்சு எழுந்தது. சேர்த்துக்கொள்வது சட்டபூர்வமானது அல்ல என்றாலும் குழந்தைக்கு குருதித்தந்தையின் சொத்தில் உரிமை உண்டு, பேணும்செலவு கோர உரிமை உண்டு என்னும் தீர்ப்புகள் வந்தன

அந்த வாழ்க்கைமுறை இன்று இன்னொருவகையில் வருகிறது, இளையோர் நடுவே. இங்கும் பொறுப்பேற்கத் தயங்குவதிலிருந்தே இது ஆரம்பிக்கிறது. ஒருவருக்கொருவர் பொறுப்பேற்காமலிருத்தல். ஒருவருக்கொருவர் சாராமலிருத்தல். ஐரோப்பாவில் இன்று மிகச்சாதாரணமாக உள்ளது இந்த உறவு. இது தனிமனிதச் சுதந்திரத்தை பேணுவதாக அமைகிறது. எவரும் எவரையும் கட்டுப்படுத்துவதில்லை. சட்டக்கட்டுப்பாடும் இல்லை

ஆனால் இதற்குத்தேவை சில உளநிலைகள். அவை ஐரோப்பாவில் உள்ளன. ஒன்று,பாலுறவை சாதாரணமாக எடுத்துக்கொள்வது. எவருடன் எவர் உறவுகொண்டாலும் ஒன்றுமில்லை என்னும் போக்கு. சேர்ந்துவாழும் ஆணோ பெண்ணோ இன்னொரு உறவை கொண்டிருந்தால் அதனால் உளப்பாதிப்படையாமலிருத்தல். அதை நம்பிக்கைத்துரோகம் என்றெல்லாம்

எண்ணாமலிருத்தல். இரண்டு, உறவையே பெரிதாக எடுத்துக்கொள்ளாமலிருத்தல். எளிதாகப் பிரிதல். அதில் உளப்பாதிப்பு கொள்ளாமலிருத்தல்.

அதோடு ஒரு சமூகநிலையும் தேவை. ஆணோ பெண்ணோ எந்நிலையிலும் பொருளியல்சார்ந்தோ பிறவகையிலோ சாராமலிருத்தல்.சமூகரீதியாக எதையும் எதிர்பாராமலிருத்தல்

இந்தநிலை இந்தியாவில் இன்றில்லை. இன்றும் நாம் ஆண்பெண் 'கற்புக்கு' பெரிய இடம் அளிக்கிறோம். உணர்வுரீதியாகச் சார்ந்திருக்கிறோம். உடைமைநிலை கொண்டிருக்கிறோம். இந்த உணர்வுகள் எல்லாமே சேர்ந்திருத்தல் என்னும் நிலைக்கு முற்றிலும் எதிரானவை.

உதாரணமாக ஒருவன் ஒருத்தியுடன் சேர்ந்து வாழ்கிறான். ஆறுமாதம் கழித்து அவள் அவனிடம் நீ சரிப்படமாட்டாய் என்று சொல்லி சென்றுவிட்டால் அவன் அதை சாதாரணமாக எடுத்துக்கொண்டு கடந்துசெல்லவேண்டும். இல்லாவிட்டால் சேர்ந்துவாழ்தல் என்பதைபோல வதை வேறு இல்லை.

இந்தச்சோதனைகளைத் தனிவாழ்க்கையில் மேற்கொண்ட சிலரை எனக்குத்தெரியும். அத்தகைய சில உறவுகளில் இருந்த சுயநலமும் துரோகமும் ஈவிரக்கமற்ற கைவிடப்படலும் நினைக்கையில் நடுங்கச்செய்பவை. கணிசமானவர்களுக்கு அவ்வுறவு இன்னும் வதைமிக்கதாக இருந்தது. எக்கணமும் பிரிந்துவிடலாம் என ஓர் உறவை அமைத்துக்கொண்டாலே அந்த உறவில் எப்போதும் பிரிவுதான் பேசப்படும். பிரிந்துவிடுவார்கள் என்ற ஐயம் இருந்துகொண்டே இருக்கும். ஆகவே அது ஜாக்ரதை உணர்வை உருவாக்கும். பிறர்மேல் ஐயத்தைப்பெருக்கும். மொத்த உறவும் அதனூடாகக் கசந்துபோகும். எப்போது வேண்டுமென்றாலும் அவ்வுறவு மெய்யாகவே பிரிவையும் சந்திக்கும்.

ஐரோப்பாவிலேயே கூட சேர்ந்துவாழும் வாழ்க்கையில் பாதிக்குமேல் திருமணம் செய்துகொள்கிறார்கள். மீறல், பிரிவு இரண்டும் அவர்களுக்கும் கடும் உளச்சிக்கலை அளிப்பவையாகவே உள்ளன. திருமண உறவில் என்னென்ன சிக்கல்கள் உள்ளனவோ எல்லாமே அந்த உறவிலும் உள்ளன. ஏனென்றால் திருமண உறவிலுள்ள சிக்கல்களில் பெரும்பகுதி அந்த உறவால் உருவானவை அல்ல, அவை ஆணுக்கும் பெண்ணுக்கும்நடுவே என்றுமுள்ள முடிவடையாத உறவுச்சிக்கல்கள்.சேர்ந்து வாழ்ந்து பழகி மணந்து பின்னர் உளம்கசந்து பிரிபவர்களும் ஏராளமானவர்கள். சொல்லப்போனால் சேர்ந்துவாழ்வது எவ்வகையிலும் மணவாழ்வை நீட்டிக்க வைப்பதில்லை.

மணவுறவின் வெற்றி என்பது ஓர் எல்லைவரை உகந்த மனிதரை தெரிவுசெய்வதில் உள்ளது. ஆனால் வாழ்க்கையை முடிந்தவரை அதற்கேற்ப மாற்றிக்கொள்வது அதன் அடுத்தபடி. மாற்றிக்கொள்ள இயலாதவர்களால் ஒருபோதும் வெற்றிபெற்ற வாழ்க்கையை அமைக்கமுடியாது. அந்த இலட்சிய துணையைத்தான் தெரிவுசெய்வேன் என எவரேனும் தேடிக்கொண்டிருந்தால் பிள்ளையார் வாழ்க்கைதான்.

மணவாழ்க்கை மட்டுமல்ல நட்புகளே கூட இந்நட்பு என்றென்று நீடிக்கும், எந்நிலையிலும் வளரும் என எண்ணிக்கொண்டாலொழிய அழமாக நீடிக்கமுடியாது. பிடித்தால் சேர்ந்திருப்போம், தேவையான அளவுக்குக் காட்டிக்கொள்வோம், பயன்படும்வரை நட்புடன் இருப்போம் என ஒரு நட்பைத் தொடங்கினாலே அது கசப்புடன் முறிவதைத் தடுக்கவியலாது.

சுருக்கமாகச் சொன்னால், உறவுகளை ஒருபொருட்டாக நினைக்காத உள்ளம் கொண்டவராக இருந்தால், எல்லா உறவுகளும் அதற்கான குறைந்தபட்சத் தேவைக்கு மட்டுமே உரியவை என உணர்ந்து உணர்வுரீதியாக ஈடுபடாதவராக இருந்தால் சேர்ந்துவாழ்தல் உகந்த வழிமுறையாக இருக்கும். ஆனால் அப்படி எவரேனும் இருக்க முடியுமா என்றே ஐயமாக இருக்கிறது. முடியலாம். மாபெரும் இலட்சியங்களை மட்டுமே வாழ்வெனக் கொண்டவர்கள். அதன்பொருட்டு பிற

அனைத்தையும் பொருட்டாகக் கருதாதவர்கள். அவர்களுக்கு இம்முறை உகந்ததாக இருக்கலாம்

மற்றபடி இன்றையசூழலில்உலகியல்பொறுப்பை ஏற்கத் தயங்கி இதில்நுழைபவர்கள் உணர்ச்சிகள் புண்பட்டு துயரடைவதற்கே வாய்ப்பு என எனக்குப் படுகிறது. இது இன்றைய சூழல். வருங்காலத்தில் மெய்யாகவே உறவுகள் அனைத்தும் உணர்வுச்சாரமின்றி, தற்காலிக சேர்வுகளாக மட்டுமே நிகழும் என்றால் இம்முறை உகந்ததாக ஆகமுடியும்

உறவுகளுக்குப் பொறுப்பேற்கவேண்டியதில்லை என்ற உளநிலையே உயிரியல்சார்ந்து பொருளற்றது. உலகிலுள்ள எல்லா உயிர்களும் உறவுகளுக்குப் பொறுப்பேற்பவை. குழந்தைகளுக்காக உயிர்கொடுப்பவை. தர்க்கரீதியாக அது அபத்தமாக இருக்கலாம்க . ஆனால் அதன் அடிப்படையிலேயே உயிர்ப்பரிணாமம் கட்டமைக்கப்பட்டுள்ளது. பெண்ணுடன் உணர்ச்சிகரமல்லாத உறவை வைத்துக்கொள்லலாம். குழந்தைகளிடம்? ஒருசிலர் அவ்வாறு இருக்கலாம். மானுடகுலமே அப்படி இருந்தால் என்ன ஆகும்?

ஆண்கள் சேர்ந்துவாழும் முறையை ஒரு வசதியாக எண்ணக்கூடும். பெண்ணை பாலியல்ரீதியாகப் பயன்படுத்திவிட்டு துறக்க இது உகந்தது என கருதலாம். அவர்கள் ஒன்று உணரவேண்டும், பெரும்பாலும் ஆண்கள்தான் உறவில் உணர்ச்சிகரமாக ஈடுபடுபவர்கள். பெண்களால் துறக்கப்பட்டால் உடைந்து நொறுங்குபவர்கள். பெண்களைச் சார்ந்திருப்பவர்கள் ஆண்களே. ஆணைச்சாராமல் பெண் இயல்பாக வாழமுடியும், ஆகவே இயல்பாகத் துறக்கவும் முடியும். மணமாகனல் சேர்ந்துவாழ்ந்த பலரை எனக்குத்தெரியும். குருதிவழிய அதிலிருந்து மீளமுடியாமலிருப்பவர்கள் ஆண்களே. பெண்கள் சென்றுவிட்டார்கள், திரும்பிப்பார்க்கவுமில்லை.

பெண்ணும் ஆணும் தங்கள் உரிமைகளை, இடங்களை வரையறைசெய்துகொண்டால் திருமண உறவில் இல்லாத எந்த வசதி

சேர்ந்துவாழ்வதில் உள்ளது? சட்டபூர்வப் பதிவு என்னும் அம்சம் மட்டுமே கூடுதலாக உள்ளது. அதை எளிதில் ரத்து செய்துவிடமுடியும் என்றால் இது எதற்காக? வெறுமே இதுதான் மோஸ்தர் என்பதற்கு அப்பால் இதனால் எவருக்கு என்ன நன்மை? ஒன்றுமில்லை

எந்நிலையிலும் ஆண்பெண் உறவு என்பது சிக்கலான உள்ளோட்டங்கள் கொண்டதாக, கண்ணீரும் சிரிப்பும் நிறைந்ததாகவே இருக்கும். அதுவே அதன் அழகு. அதில் வெற்றியும் தோல்வியும் எப்போதும் இருந்துகொண்டே இருக்கும். அதெல்லாம் இல்லாத நேர்த்தியான வணிக ஒப்பந்தம்போல உறவை அமைத்துக்கொண்டால் என்ன சுவாரசியம்? சரி, அந்த உடலுறவேதான் எவ்வளவுநாள் சுவாரசியமாக இருக்கும்?

******